அம்பிகை பயந்த வமரர்க ளியாரு மவுணரோ டமர்செயவா
ரவர்கள்—வெம்பிடர் தவராய வென்றிமா லிகையே வேயாநத
ர்மீள்தரல் வேண்டும்—பம்பிய பவத்தில வீழ்ந் தழலாதபர
கதி கொடுக்கு மின்பதமே—கம்பிடு ஞான மெனக்கு மென்பதிக்
கும வேண்டுமின் றருளென நவின்றாள். (௪௧)

நவிறலும் பொருளை நாயகி யாவு நலமுற வளித்தன மிமை
யோ—ரவிர்தரு வென்றி வாலகரு டினரா யடுத்தன ரொன்றரு
ள் புரிந்து—குவிதரு மவுண ரடுத்ததும் வனனிக் கோட்டைமுன்
குயினறதவ கொடியோர்—கவிதரச் சூழ விருந்ததும் பின்னர்க்
கடந்ததுங் கனிவுறப புகன்றாள். (௪௨)

இங்கனீ தாக வங்கவ ருடற்று மிம்மயவ ரவுணரை மாயத்து
ப், பொங்கிய களிபபிற போந்து காசிபனைப போறறினா வய
ரிலை புகன்று, ரங்கவன களிததான் முயதவ மாற்ற லறைந்த
ன னமரரோ டெழுந்து, பஙகமி னெல்லி மாலனத் ததிபண
னக சாலையிற் படர்நதான். (௪௩)

படர்தலு மதிதி பதியைமுன வணங்கிப பண்ணவர் தங்களை
யனையா, விடரற நீரிங கெயதிய தன்னை யிவளருளாமென வி
சைப்பத், தொடர் தரு தவத்துக் காசிபனோடு சுரரெலாந் து
ணையடி பரவிக். கடன் மடை திறநத தெனப்பல புகழுநது க
ணகொளாக் காட்சியி னிலைத்தார. (௪௪)

அருணிறை பொருளை யமபிகை யருளி னதிதிகா சிபர் தமை
நோக்கித, தெருணிறை யிநகத் துறையினி ராடித் தெரிசனை
செயதனி ரின்று, மருளற மகமொனறுற றயிரா மூழகன மறற
வித் துறையதே யதனுற பொருளுறு தீரததங காசிபதீர்த்தம
புகன்றனம் பெயாபுகழ பொலிய. (௪௫)

காசிப தீர்த்தந் தனையொரு காலங கருதினோர்கள் களாற க
ண்டாா பேசினோர் மூழகிப பெருந்தவம் புரிந்தாா பெறற கரும்
பேறுவே றிலையா, லாசிலா மூனறு புவனத்து நீத்தமமர் வ
னகோடி மூன்றனையா, மாசிலா தெவைக்கும புனிதமாகா த்தி
ய மலிநததித் தீர்த்தமா வழங்கும். [௪௬]

இனியிவண மகமொன றியற்றுக வினறவ னெழுந்தருள புரி
குவ னெல்லாங் கனிவுறப பெறுக வெனவருள புரிநது கது
மென வதனுற காநதாள், பனிமல ரயனு மாயனும வேதப

பனுவலும் பாறகடன மகளும், புனித பாரதியும்புகழ்ந்திடக்
கேவா புனமலர் பொழிந்திடமாதோ. (சஎ)

ஆவியுமபொருளுமுத்தியுந் தவமே யாமென வாற்றுகை நி
சத்திர, காவியுங் கமழுங் கமலமு மலர்ந்த காசிப தீர்க்தமா ம
கிமை, தாவிய வனந்த னுனைககடங்காது சாறறினஞ் சிறிது
மாமகத்தினை, றாவியல் காசி பேசுரச் சருக்கஞ் சொல்லு
மிச்சொல்லுது மன்றே. (சஅ)

பூங்குழ லதிதி பொருநாகா பகிலைப் புகழ்தகற் புனிதவா
சகங்க, ளோங்குயர் தகவி ளொருமுறை புகன்ற ருபாதியும் வ
ருமையுமுறுதா, ராங்கவை யிருகா லுறைந்தவ ரிம்மை யம்
மையி னலமெலா மடைவா, ரீங்குறு கால மூனறிறுமிசைய பா
ரெய்துவ ரெம்பிரான் கயிலை. [சக]

காசிபதீர்த்தச்சருக்கம் முற்றிற்று.

---

பதினொன்றாவது.

## காசிபதீர்த்தச்சருக்கவசனச்சுருக்கம்

---

திரேதா யுகத்தில் சாபர்ணிய மனுவின் காலத்தில்பிரமகுமா
த்துதித்த தவச்சிரேஷ்டனாகிய காசிபமகாமுனிவன், அதிதி திதி
யென்ற இரண்டுமனைவியருடன் வாழும நாளில் அதிதிவயிற்றில்
தேவர்களும் திதிவயிற்றில் அசுரர்களும உதித்தனர். அவர்கள்
ரைதிரை மூப்புச் சாக்காடின்றி நீடூழிவாழ நினைத்துத திருப
பாலாழிகடைந்த காலத்தில்வந்த அமுதத்தைத் திருமால்மோகி
னி அவதாரஞ்செயது தேவருக்குமாத்திரம் அளித்து மறைதலும
அவுணர்கள் தமக்கு அமுதமில்லாமற் போனதுகண்டு வருந்தி
! யிதற்குக் காரணம் இந்திரன்தானென்று மதித்து அவனுடன
போர்புரியவர இந்திரனும் பிதாவிடத்தில விடைபெறறுத தேவ
ப்படைகள் சூழ ரணகளஞ்சென்றெதிர்ப்பாராயினர்.

இவ்வாறு தேவர்களும் அசுரர்களும் நெடுநாளாசயப் போர்
புரியாநிற்கையில் அதிதி தன்மக்களைப்பிரிநத பிரிவுககாறறு தழு
ங்கித் தனபதியாகிய காசிபமுனிவனை வணங்கி, சுவாமி, நம்ம
க்கள் அவுணரோடு போர்புரியச்சென்று வெகுகாலமாகியும் இ

னும் மீண்டிலர், போரில் வென்றாரோ? அன்றிப் போன்றாரோ? ஒன்றும் அறிந்திலேன், அவர்கள் நிலைமையை யுரைத்தருளல் வேண்டுமென்ன, ஞானதிருஷ்டியால் எல்லாமுணர்ந்த காசிபன் அதிதியைநோக்கிப் பெண்ணே, தேவரும் அசுரரும் இன்னும் அமர்செய்துகொண்டுதான் இருக்கிறார்கள் அவுணர் ஜெயம் அடைவார்போற்காணப்பட்டாலும் இந்திரன் வல்லமையுடையவனாதலால் பின்வாங்காது போர்செய்கின்றனன். நின்மக்களாகிய தேவர்கள் வெற்றிமாலைசூடவேண்டுமெனில் நீ இப்பொழுதே பூலோகத்தில் பாண்டிமண்டலத்தில் ஆமலகவனஞ்சார்ந்து பராசத்தியாகிய பொருநைநாயகியைத்தியானித்துத் தவம்புரிவாயாக வென்றனன். அதுகேட்டு அதிதி களிப்புற்று முனிவனை வணங்கி விடைபெற்று ஆமலகவனஞ்சார்ந்து பொருநைமாதேவியைத் தியானித்து அருமையானமாதவஞ்செய்யத்தொடங்கினள்.

இவ்வாறு அதிதிதவஞ்செய்தலைக்கேட்டு அவுணர் அவளைக்கொல்லக் கருதி அனவரததானவாசமாமுகத்தினின்று நீங்கித்தொலையாத வழிகடந்து வராநிற்கையில் கருணைநாயகியாகிய பொருநைநாயகி அவ்வதிதியைச்சூழ ஓர் அக்கினிக்கோட்டை ஆகாயமளந்து நிற்குமாறு நிறுவலும் வந்தவுடனே தானவர் அக்கோட்டையைக் கண்டு நடுங்கிச்சமீபத்திற் கூடச்செல்லமுடியாதவராய் மீண்டும் ரணகளஞ் சார்ந்தனர்.

அப்பால் பொருநைநாயகி அவ்வக்கினிக்கோட்டையை நீத்து அதிதிமுன்சென்று உனக்குவேண்டும்வரம்யாதென்ன அதிதி அத்தேவியைவணங்கித் துதித்து என்மக்களாகிய தேவர்கள் வெற்றியுடன் மீளவேண்டுமென்ன, பொருநை, அவ்வாறாக, என்றருளலும் தேவர்கள் அவுணரைவென்று ஜயசீலராய்த்தந்தையை யடைந்து வணங்கலும் காசிபர் களிப்புற்றுத் தேவர்களுடன் ஆமலகவனஞ்சார்ந்து பொருநைநாயகியைக்கண்களாறச்சேவித்துப் பற்பலபுகழ, அத்தீர்த்தநாயகி காசிபரையும் அதிதியையும் நோக்கி நீவிர் இத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து என்னைத்தெரிசித்தீர் அன்றியுமிங்கோர் மகமியற்றுவீர்கள், இத்துறையிலே ஸ்நானஞ்செய்வீர்கள், ஆனதால் இத்தீர்த்தம் காசிபதீர்த்தமென்ற பெயருடன் திரிலோகத்திலுமுள்ள மூன்றரைக்கோடி தீர்த்தங்கட்கும் மேலானதாக விளங்காநிற்கும் மேலுமித்தீர்த்தமகிமையைத்தந்தார்க்கும் பார்த்தார்க்கும் புகழ்ந்தார்க்கும், ஸ்நானஞ்செய்தார்க்கும் ஸ்நானஞ்செய்து தவஞ்செய்தார்க்கும் நன்மையெல்லாங் கைகூட்

டுவிக்கும். இதன்மகாத்மியத்தை யாராலுமளவிடமுடியாதென்றருளிக் காசிபனைநோக்கி நீஇங்கோர்யாகஞ்செய்கையில் சிவபிரானுங்கெழுந்தருளி, வேண்டும்வரம் அளிப்பனென்றுரைத்து அத்துறையில் மறைந்தனள்.

உயிரும் பொருளும் மோக்கமும் தவமேயாமென மதித்திடுகின்ற நைமிசாரண்யத்து முனிவர்களே! இக்காசிபதீர்த்தத்தின் மகிமையிற்சிறிது யான்சொன்னேன் முழுவதும் சொல்ல எவராலுமாகாது. இதனிற் காசிபர்யாகஞ்செய்தருள்பெற்ற கதையினைத்தையுங்காசிபேச சுரசருக்கத்திற்கூறுகின்றேன். அதிதிபொருளைமாதேவியைப்புகழ்ந்தவாக்கியங்களை ஒருமுறைசொன்னவர் நோயும் வறுமையுமணுகார். இருமுறைப்புகன்றோர் இம்மைமறுமைப்பயனடைவார், மும்முறைப்புகன்றோர் சாவாப்பீடைமும்பெறுவார் என்றுரைத்துச்சூதமுனிமேற்கூறுதலானார்

## காசிபதீர்த்தச் சருக்கவசனச்சுருக்கம் முற்றிற்று.

---

பன்னிரண்டாவது.

## கிருமிகரதீர்த்தச்சருக்கம்.

பால்வளங்கெழு பணிலங்கள் படர்தரு புனமுஞ்
சேல்வளங்கெழு குரால்கூர் கழிகளுஞ் செட்குக்
கால்வளங்கெழு பொழில்களும் வரைகளுங் கவினு
நால்வளங்கெழு சிறப்பின கேரள நாடு. (௧)

தேவலோகத்தி னசையறச் சிறையிற் றுறந்து
யோகலோகத்திற் சிறந்தருளுறுவரும் விரும்பு
நாகலோகத்தி னரைதிரை மூப்பினை யயவார்
போகலோகத்திற் பொலிவது கேரள பூமி. (௨)

சிலையுஞ் சேணுறச் சேர்தலைத் தெங்கிளநீருங்
கொலையுங் கோபமுங் கொதித்தெழு குஞ்சரக் கோடுங்
கலையுங் காலமுங் கவிழ்தலுங் கடிந்துயர் கனக
மலையு மாலெலா மலிவன மலையமண் டலமே. (௩)

இன்ன மண்டலத் திரசதத் தெழுநிலை மாட
மன்னு தோரண மறுகுசூழ் வஞ்சிமா நகரிற்

ன்ன வஞ்சிலை கரந்தருள் காமனே ரனையான்
எந்தி லங்களு மிருபுயத் தேந்துமோ ரேந்தல் (௪)

இழிவில சீர்த்திய விராசசே கரனெனு மிறைவன்
பழுதின் மாநிலம் புரக்குநாள் பணிசெய் வினையின்
வழுவி ருந்தின வன்மையான் மலங்குடைந் தயரும்
புழுவெ ழுந்துதிர மேனியோர் புதல்வனைப் பயந்தான். (௫)

உடலெ லாமுட லுரோமத்தி னுழியெலாங் கிருமி
படர்ந்து திரந்திடு குழவிமேற் பார்த்திப னன்பு
கடந்தி லன்கருங் காக்கைதன் பார்ப்பினைக் கனகச்
சடங்கொள் பார்ப்பென வணைத்திடல் சகசமே யன்றோ. (௬)

மெய்யெ லாம்புழுச் சொரியினு மிறையெனும் விதன
மெய்தி லாசிறு மகவினை யெடுத்துமோந் தணைத்துப்
பொய்யி லாதகி ருமிகளே பரனெனப் புகன்று
மையு லாங்கரு விழியினு மதித்தனன் வளர்த்தான். (௭)

வளர்த்த மைந்தற்கு வடிகலை தெரிகுமா மறையு
மளப்பி லாப்பல கலைகளு முணர்த்தின னுகிக்
கிளர்த்த காளையம் பருவமுங் கிடைத்தது நோக்கித்
தளக்க ருங்குழ லொருத்தியைத் தகுமணத் தளித்து. (௮)

வையம் யாவையு மனுமுறை காவென வழுத்திச்
செய்ய கோலையு முடியையும் முறையுறச் சேர்த்தித்
துய்ய சந்திரப் பிள்ளையுங் கங்கையுந் தூரு
மெய்ய னிந்தருண் மெய்யனா வியன்கதி விரைந்தான். (௯)

தந்தை யேகலும் புழுச்சொரி சடத்தினன் றரணி
முந்தை யோரெனக் காத்தனன் முறைசெலுத் திடுநாள்
கந்த ரத்தமிழ் வரையுலாங் கணக்கறு விலங்கால்
வந்த தீவினை யறிந்தனன் மனங்கடு கடுத்தான். (௰)

வைய மூர்ந்தனன் வயப்படை தரித்தனன் வளைந்த
மையி ருங்கடற் படையுடன் மலையமா மலைபோய்க்
கையி லங்கிய கல்லினைக் கரடியைக் கலையைச்
செய்ய வேலினுங் கணையினுஞ் செற்றனன் றடிந்தான். (௰௧)

அந்த வேலையிற் கேழலொன் றதிசினந் தெதிர்ந்து
முந்து தானையங் கடந்து முனைந்தது முடுகி.

மந்த ராசல மெனச்சுழல் சுழன்றது வளைந்த
சந்தி ரப்பிறை யெயிற்றினூற றடிந்தது தலைகள். (௰௨)

வெம்பி யாங்கெழு விளைவினால் விழிவழி நெருப்பாற்
கொம்பி னானமணிக் குளம்பினாற் குதிரைகுஞ் சரங்க
ளம்பி ருந்தவில் லாளிய ருயிர்செகுத் தனல்சேர்
செம்பி ருந்தகட காவலன் றேருறா தியாதால். (௰௩)

வேறு.

மொய்த்திகல் படையைக் காலின் முனைந்தெழு பிரதந் தனைக்
கைத்திடு பொடியிற் செய்த கருநிறக் கேழல் வீழப்
பைத்தெழு சினத்து மன்னன பாரவில் வளைத்துச் சோரு
மெய்த்தலைப் புழுவின வாளி சொரிந்தனன் மேக மஞ்ச. (௰௪)

ஒப்புறக னன்று சென்றவொண் ணுதித்தொடை கள் கேழற
கப்புற முருவிச்சென்ற வாயினும் வீயா தாகிக்
குப்புறக் கிடந்து மாழ்கிக் குருதிகொப் புளித்து மீண்டு
மப்புறத் தெழுந்து சீறி யனையனோ டெதிர்த்த தம்மா, (௰௫)

மீளவு மெதிர்தல் காணு வேந்தனோர் வைவே லோச்சி
மூளையா ருயிரும் வீவான மோதினன் மோத லோடு
காளமே கத்தைப்போல வுருமொலி கடிதிற காட்டி
வாளனீண் மலைய நோக்கி மற்றது விரைந்த தன்றே. (௰௬)

விரைதலுங் கோற லின்றி விடுகில னென்ன வஞ்சிக்
கரையனுந் தொடர்ந்தான் பின்ன ராரமா மலையி னுச்சி
வரைபல கடந்து கும்ப மாதவன் சூழ லுண்டித்
தரைவழி படர்ந்து சிங்கைத தடங்கள் கடந்து மேலும். (௰௭)

பவனமே கால்க ளாகிப் பாய்ந்திடு முதிய பன்றி
கவர்தரு களைப்பாற சற்று கவனமோயத் தயர்ந்து மெல்ல
நிவாதரு முள்ளி நாட்டு நெல்லிமா வனத்திற் செல்லத் (டான்
தவாகொடு தொடர்ந்தான் வாளி யொன்றினூற றலைகொய் திட்

சூகரம் படலும் வஞ்சித் தோன்றலு மளவில் காத
மேகரும் வரைக டந்த விளைப்பினா லயர்ந்தா னீருண்
தாகமேன மேலுஞ் செந்தீத் தழலென வெதுப்ப லாலே
ஆகமு நாவும் வாயு மலர்தர வாட லானான். (௰௯)

தாங்கருந் தாகந் தீர்ப்பான் றனியெழுந் தினிது தென்பா
லாங்கிருந் தொருகு ரோச மகன்றனை னரிது கண்டா

சவமுதற் றன்மை நலகுரு சங்கரன கையிலை சோக்கு
முவரிரு மூலகினீத்த முலப்பில வுயாவீ தொன்றுல (௨௮)

இனனுங்கேண் மனனு சினனு ளெயதிடப் பொருளை யென்னு
நனனதி நதிகட் கெல்லா நாயகி யிக நீத்தத்தினை
மனனினள் கலந்து செல்வாள் வைபவ மளக்கு மேயோ
வெனறொரு நாவுஞ சேடற கெயதிய நாவுமையா. (௨௯)

முனசெயத தவமே யிஙகண் மூணடெதன றுரைப்ப வேந்தன
டொனசெயத சடிலயோகி பொறபதம வணஙகியையா (றுய
வெனசெயதே னெளியேன முனனே றியற்றுமா தவத்தின பே
மினசெயமா தவமாகியாய விளஙகினை யடிக ளெந்தாய. (௩௰)

உனனைபபோன முனிவரிலலை யுனறனை வணஙகா
வெனனைப்போ லரசிங கில்லை யெனறின வியந்தா னாநந்
தனனைபபோயச் செயய யோகி சஙகறப முறைமை நல்கப்
பினனைபபோய மனனன பொயகை பெரிது செனறுட னுறறுன்

புழுப்பொலி மேனிநீஙகிப் பொனபொலி மேனி யெயதி
விழுத்தகு முனிவற போற்றி மறறவன விதித்த வாறு
பழுபபொளி பரப்பு மேமம் பசுமுத லனைத்துமம வேதம்
வழுததிய முனிவர் கொளள வளைப்பில நல்கி னனறுன. (௩௨)

னறவன றன்னை நோக்கி நிகரிலா முனிவன் கால
மெனறுமிந நீத்த நினனுற் கிருமிகர தீர்த்த மெனறு
மினறுதொட டினபேர் சொான கரோபர விறைவ னென்று
நன்றுற விளங்க வெனன நவின்றன னுசி கூறி. (௩௩)

தேவாபூ மாரி பெய்யத் திருவருண முனியைப் போற்றிக்
காவலன விடைகொண டேகிக கடுவெளிப் பரிதயேறிப்
பூவலம புரிநது வருசிப பொன்னகர் புகுந்து நினற
மூவருண முதலா வைய முழுவது மளித்தான மனனே." (௩௪)

வேறு.

தேன்பொழில்சூழ் நைமிசத்தா கிருமிகரத் திறம் பெரிது
சிறிது சொறறே—வான்பொதிநத வுடலெடுத்தா ரெவரேனு மி
க்கதையை யொருகாற கேட்பின்—வான்பொழிலிந திரனுகிய
யனுவர் வழஙகு வித்தா மாலே யாவர்—மான்பொதிந்த கரத்
தழகர் பதிவிளங்க வீறறிருப்பர் வழஙகி னுரே.. (௩௫)

கிருமிகரதீர்த்தச்சருக்கம் முற்றிற்று.

## பன்னிரண்டாவது.

## கிருமிகரதீர்த்தச்சருக்கவசனச்சுருக்கம்.

நீர்வளநிலவளங்களாற் சிறப்புற்றோங்கிய சேரமண்டலத்தில் வஞ்சிமாநகரில் இராஜசேகரனென்னும் பெயருடைய அரசன் அரசாட்சி செய்துவருநாளில் முன்செய்த தீவினையின் பயனால் உடல்முழுவதும் புழுமாரி பெய்யுமோர் புத்திரனைப் பெற்றுக் கிருமிகளேபரனெனப் பெயரிட்டு நாளொருவண்ணமாய் வளர்த்து வில்வித்தைமுதலாயின கற்பித்து மணமுடித்து முடிசூட்டிச் செங்கோலளித்து உலகத்தை நீதிவழுவாது காப்பாயாகவென்றுரைத்துச் சிவகதியடைந்தான்.

தந்தையிறந்ததன்பின் கிருமிகளேபரன் உலகமெல்லாம் முறைவழுவாமல் ஒருகோல் செலுத்தும் நாளில் பிரஜைகளின் நன்மையைக்கருதிப் பயிர்களுக்கும் உயிர்களுக்கும் தீங்குவிளைத்த காட்டிலங்குகளைக்கொல்லும்படி அமைச்சரும் படைகளும் புடைசூழ இரதமூர்ந்து பொதிகையிற் சென்று வேட்டையாடா நிற்கையில் ஓர் கொழுத்த பன்றி அங்கெதிர்ப்பட்டு அரசன் சேனைகளையெல்லாம் நாசஞ்செய்தலும் காவலன் கோபித்து ஓர் வேலாயுதத்தினால் அதன்முனையில் இரத்தம் சிந்துமாறு அடிக்க உடனே பன்றி செருமுனை நிற்பதற்கு அஞ்சி மலயமலை நோக்கி விரைந்தோடலும் அரசனும் பின்றொடர்வானாயினன். இவ்வாறு அரசன் பின்றொடர்ந்து வருதல் தெரிந்த பன்றி பொதியமலை முழுவதுந்தாண்டிப் பாண்டியதேசத்தில் முள்ளிநாட்டில் ஆமலகவனத்திலோர் குழிவரத்தொடர்ந்து வந்த காவலன் ஒரு பாணத்தால் அதன் சிரத்தைத் துணித்துத் தாகசாந்தி செய்யும் பொருட்டு அவ்வகோரசுனையில் முழங்கால்வரையில் தண்ணீரிலிறங்கி நீர்பருகிக் கரையேறுகையில் அந்நீர்பட்ட கை கால் வாய் முதலான இடங்களிற் புழுவில்லாதிருத்தலைக்கண்டு களித்து இச்சுனையோர் புண்ணிய தீர்த்தமாயிருக்கவேண்டுமெனக் கருதி மந்திரிமுதலானவர்கள் அவ்விடத்தில் வர அவர்களுடன் அங்கோர் முனிவரிடத்திற் சுனையின் வைபவமெல்லாஞ்சொல்லியருளவேண்டுமென வணங்கலும் முனிவர் சொல்லலாயினர்.

கேளாய், அரசனே சிவபிரான் சடாபாரத்தில் கங்காநதி அதிவேகமாய் வானநதியிலிருந்து விழுங்காலத்தில் ஓர் துளி இவ

குவிந்தது ஒருங்கேயாகியது இச்சுனை தீராத பாதகங்களையும் நோய்களையும் நீக்கவல்லது அதிபவித்திரமானது இன்னுஞ்சிலநாளில் இங்கு பிரவாகித்துவரும் பொருநையோடு கலந்து விசேஷமான பவித்திரமுடையதாய் விளங்கப்போகின்றது. இதன் மகத்துவமனைத்தையும் ஆதிசேடனாலுஞ்சொல்லமுடியாதென்றதும் அரசன் அளவற்ற சந்தோஷமுடையவனாய் அம்முனிவனை வணங்கித்துதித்து சங்கற்பவிதிப்படி அச்சுனையில் நீராடிப்பூச்சொரியும் வியாதிநீங்கிப் பொன்பொலிந்த காத்திரமுடையவனாய்ப் பற்பல தானங்கள் முனிவருக்கு நல்கிப் பிரார்த்தித்துநின்றனன். அப்போது அம்முனிவரன் வேந்தனை நோக்கிக் களித்து அரசே இன்றுமுதல் இத்தீர்த்தம் உன்னாற்கிருமிகரதீர்த்தமென்றும் உன்பெயர் சுவர்ணகேசரனென்றும் வழங்கக்கடவது என்று ஆசீர்வதித்தலும் தேவர் பூமாரிசொரிந்தார்கள் அரசன் அம்முனிவனிடத்தில்விடைபெற்றுப்படைகள்சூழத்தேரேறித்தன் பதிபுகுந்து உலகமெல்லாம் ஒருகோல் செலுத்தலானான்.

நைமிசவனத்துமுனிவர்களே இக்கிருமிகர தீர்த்தத்தின் பெருமையிற்சிலசொன்னேன்முழுவதுஞ்சொல்லுதற்காவதன்று இத்தீர்த்தத்தின் மகிமையைக்கற்றோருங்கேட்டோரும்பூலோகத்திலுள்ள இன்பமெல்லாமனுபவித்துப்பின்னர் இந்திரன்பிரமன் விஷ்ணு ஆகிய இவர்கள் பதவிகளையும் பெறுவார்கள் படனஞ்செய்யுமாறுபொருளுணர்ந்தவர்கள் அழியாதசிவகதிபெறுவார்கள் என்றுரைத்துச்சூதமுனி மேற்கூறுதலானார்.

கிருமிகரதீர்த்தச்சருக்க வசனச்சுருக்கமுற்றிற்று

---

பதின்மூன்றாவது.

## கோகிலதீர்த்தச்சருக்கம்.

---

துடிதுளக்கிய கையினர் மெய்யினர் துண்டு
விடைதொடர்ந்திடு சதியது மேனிமேற் பொதிந்த
பொடியினிற்றத்து கேழல்கீழ்ப் புகுந்தது நேடு
மடியடித்தல மாழ்ந்தசவ் வமரர்த மாறு. (௧)

திருவி னீர்த்தடத் திருமல ரனைத்தையுந் தினஞ்செய
யொருவ னேமலர் தரப்புரி பான்மைபோ னான்றும்
பொருவில் யாழிசைச் சித்திரன் பொன்னனூர் கனிபபின்
மருவ நீர்வினை யாடினன் வருவினை தெரியான். (ய)

வேறு.

கங்கைநீர்ப் பெருக்கிற் காதனீர்ப் பெருக்கங் கலந்ததிற் க ளித்தகா ரிகையார்—தங்களோ டினிது தந்திரி யாடற் றுமதத் தடம்படி தருணஞ்—செங்கையின் மகர யாழ்விர னடித்துத் தெ ய்வதச் சாமகா னத்தா—னங்கையோர் பாக னருபதம் புகழுந்து நாரத முனிவனுங் குற்றான். (யக)

கலைமகள் சுதனைக் கண்ணுதற் கடிமை கதித்தவோர் கடவு ண்மா முனியைத்—தலைகொளே ழிசையின் மழைபொழி முகிலை த் தன்னையே நிகரு நாரதனை—மலைகளே சுமந்த மினனொனுந் த னத்து மங்கையர் மையலான் மயங்கி—யலைகண்மேற் றுரும்பா யாற் றிடைக்கிடப்பா னடைந்திலன் வணங்கிலன கண்டும். ()

தன்னிலை யுணர்ந்து மதித்தில னுயிர்த்த சவமெனத் தைய லார் நாப்பண்—இன்னினன் களித்தான் சித்திர னெனவேழ் சுரு தியா ழிடந்தழு உந் துறவி—வன்னமென் குயிலா வாகெனச் ச பிப்ப மற்றவ னறிந்தனன் மயங்கு—முனனமு முடனுமின னெ னதுங்க முடுகினன் முனிவனை யடைந்தான். (யங)

அடிமல ரிடமிற் றடியறு மரமீ தாமென வரற்றினன் விழு ந்து—கொடியனு னடிக ளிங்கெழுந்தருளல் குறித்திலன் குறுகி ல னடிக்கீழ்ப்—படிந்தில னெடிய மோகசாகரத்திற் பாழ்படவ ழிந்தனன் பாவி—கடையனேன் பிழைத்த பிழைபொறுத் துரை த்த கடுமொழி தவிர்த்தரு ளென்றான். (யச)

பன்முறை வணங்கிச் சித்திர னுரைத்த பண்புகேட் டிசைமு னி பணித்த—சொன்முறை தவறு தாயினும் பாண்டித் தொன் மையா நெல்லிமா வனத்தின்—மென்மொழிக் குயிலா யுதித்து நீள்பொருநை வெள்ளநீர் மூழ்கியாங் கெழுந்த—நன்முதற் ப ணிய நல்ல வாமென்ன நவின்றன னுறைவிட நடந்தான். (யரு)

துங்கயாழ் முனிவ னேகலு நெருங்கு தோகைய ருயிர்துறந் திலராய்த்—தங்களு டைந்தார் சித்திர னெலகி தழைதரு தட வனத் தலவு—பங்கனோர் குயிலின் கருவிலண் டசமா யமர்ந்த

னனது கருங்காகம்—பங்கயில் சினையோடொன் றறப்பயந்து பறநதது பற்றறத் துறந்தே. (௰௬)

ஆவலின் மெல்லென் விறகினுற் காக மணைத்தடை கிடந்து ரு வாகித்—தாவுறு பருவஞ் சினையெலாம் வளர்ந்து தழைக்கு நாள் வரைவளர்த் ததுபின—காவென லன்றிக் கூவெனக்கூவுங் கருங்குயிற் சேவலைக் கடிந்து—போவெனச் சிறையிற புடைத்த து பிரிநது போயது பொழிலிடைப் பிகமே. (௰௭)

வானெலா மிழந்து வையக மடைந்து வரிச்சிறைக் குயில் கரு வுயிர்பப—வீனமாங் காகம் வளர்த்திட வளாந்தங் கின்னி சைகேட் டதுதுறப்பத்—தானமாங கிழிந்து தநதைதாயின்றித் தனிமையாய்ச் சரித்திடு குயிலாயத்—தீனமாங் குழன்றுன் சி ததிரன் காமத் திருக்கினுர் சிறிதுமுய குவரோ. (௰௮)

தனிமையா யிரங்குந் தத்தளித தனுங்கும் தன்னிலை தனத கத் துனனிப்—பனிவுறும் வானப் பரப்பிடைப் பறக்கும் பச்சி ளஞ் சோலையுட் படருங்—கனிபல வருந்துங் காட்டமா யுலாந் து கருகிய கட்டையுந் தளிர்ப்பப்—புனித சங்கீதம் பலபல புகன று பொலிவுறும் பொருமுறும் புலம்பும். (௰௯)

கோகில மின்ன நெல்லிமா வனத்திற் குலவுநாள் கோதறு பொருனை—யாகிய நதியின வடபுலத் தொருபொ ஞலய மிருப் பது மதனுட்—போகிமா லயஞ்ஞே டியாவரும் புகுநது பூசனை பு ரிவதுந் தேக—தேகியாய் விளஙகுஞ சிவபிரானி லிஙகத திருவு ரு திகழ்வதுந் தெரிந்து. (உ௰)

நல்வினைப் பயனுன் ஞானம்வந் துறலா ஞுயிர் நாயக னை யப்பத்—தொல்வினை முறையாற பூசனை புரிந்து சுழல்வளித் து ரும்பெனச் சுழற்றும—வல்வினை தவிழ்த்து வான்கதி பெறுவன் மற்றெனை மதித்தவா லயத்திற்—பல்வினை மாக்கள் வெளிவரு காலம் பார்த்ததோர் பாதவத் திருந்தே. (உக)

செய்யகட் குயிலின் செயலினை வாகத் திருப்பள்ளி யெழுச் சிநேய தொட்டு—வெய்யகட் பருதி யுச்சிவந் திருக்கும் வேளையி னிறுதியாய்த் தேவர்—வையகப் படிவ ரிருவரோ டெவரு மலர் சொரிந் தடியிணை பரவி—மெய்யகக் கனிவிற் பலபுகழ்ந் தைய ன் மெய்ப்பிர சாதமு மேவி. (உஉ)

மாணத்தா லடுத்தாராக வழுத்துமி னிறைவ னூர்க்கங்
கினைத்தாற் பிழைத்தா ரியாவ ரில்லெனிற் கடிவ னென்றான். ()

என்றலு மரசே யாங்க ளேதுமிங் கறியோ மென்றார்
வென்றிசேர் வேந்தற் குண்மை விளங்கிலை யாத லாலே
யன்றுநீர் சென்மி னென்று மியாவரு நடந்தா ருண்மை
யின்றுகா னறிந்தா லன்றி யுண்கிலேன் யாது மென்ன. (கஎ)

காவல னருந்த சாம காலமுங் கழிந்த பின்னர்த்
தேவர்தம் பெருமான் சன்னி தானத்தோர் சிறைப் புறத்து
மேவினன் றுயினனு னந்த வேலையிற் காசிபேசர்
பாவலர் புகழும்வேத பாரக னாகத் தோன்றி. (கஅ)

அரசகே ளியாமிக் கோயி லனக னு மெம்மைப் பூசை
வரன்முறை செய்ததிங்கோர் வரிச்சிறைக் குயிலிப் பூசைத்
திரம்பெரி தெமக்கு மஃதே சிறப்புள தகற்றேல் வேறென்
றரம்பெறேல் போதியென்ன வுரைத்தலும் விழித்து வேந்தன்.

தவந்திக ழுந்தனுளர் தங்கட்குக் கனவின் செவ்வி
யுவந்திட மொழிந்தா னுள்ளத் தருகினு னுளது காண்பான்
பவந்திக ழுடியே னெஞ்சிற் படர்ந்தனை படர்ந்த தாள்கள்
சிவந்தவோ வீசவென்னத் திருவடி வணங்கிப் போற்றி. (சய)

மரகத மணிப்பெண் பாத மலர்முடி தரித்துத் தன்னோ
ரரண்மனை யடைந்தா னப்பா லன்றுதொட் டாதி சைவர்
திரமுறு பூசைசெய்து சென்றபின் குயில்வந் துற்று
வரன்முறை பூசைசெயது மகிழ்ந்திடி நானி லோர்நான். (சக)

வேறு.

ஆகமத்தின் முறை தெரிந்தா னாராதனை புரிந்து
போகுதலுங் களகண்டம் பூம் பொருகை நீராடி
நாகர்தரு மலர்முறிக ணற்கனிகள் பல கவர்ந்து
வாகமரு மொருகோட்டு வாரணத்தின் றான் பரவி. (சஉ)

மாழைமணிப் பெருங்கோயில் வலஞ்சூழ்ந்து கோபுரத்தின்
பூழைநுழைந் தகிலேசர் பூசைமுறை முறை புரிந்திவ்
வேழைபடும் பாடனைத்து மெந்தாய் நீ யறியாயோ
பீழைதவிழ்ந்தன் னருள்யான் பெறுநாளு முளதேயோ (சங)

கள்ளார்ந்த மலர்ச்சோலைக் காட்டகத்துக் கரியகுயிற்
புள்ளாகிப் புலனழுங்கு புலையேனோ ராளாகக்
கொள்ளாயோ வஞ்சேலென் றொருகூற்றுப் புன்னகையின்
விள்ளாயோ வெனப்பலவும் விளம்பியெதிர் வேண்டியதால.()

வேறு.

கண்ணார நீர்சொரிந்து கருத்துருகிப் பாடனைத்துங் கதறினற
பணனாருங் குயிற்கிரங்கிப் பரமபதி மணிலிங்கப் படிவ நீங்கி
விண்ணூரு மழவிடைமேன் மரகதப்பெண் ணொருபாகம விளங்கக்
கொன்றைத்— தண்ணூரு மணிவேணிக் கணபதிவே ளிருபாலு
நீ தழைப்பத் தோன்றி. (சரு)

அரும்பிகளின் னபிடேகம் வலாரிசகத திரதாரை யதினு வ
ந்தோம்,பொருந்து புலித்தோலுடையி னீயளித்த தளிருடையே
புனைந்து கொண்டோந்—திருந்தியகின ளருச்சனைக டிருமாக்க
ளருச்சனையிற் றிருந்தி யாதேனும—விருந்தமுதி னீயளித்த விய
னகனியே மேலாக விரும்பி யுண்டோம. (சக)

தேவருக்கு மியாவருக்கு மரிதாகின் னுபசாரஞ் சிறப்பாக்
கொண்டோ—மேவருககு மரிதாகின் பத்தியின்பா லினிதுவந்
தோ மெதிர்வந் தற்றே—மாவலுக்கிங் கடுத்தவெலா மறைதி
யுனக் கருளுதுமென் றருளக் கேட்டுப—பாவருக்கம் பயில்குயி
லங் களவாத வானநதப பரவை மூழகி ()

எந்தைபிரா னமபிகையா ளிருசிறுவர் வடிவனைத்து மிருகண்
ணுறச்—சிந்தையுறப பருகிலலஞ் சுழநதவாக டிருவடியிற் செ
ன்னி சேர்த்திச்—சநதமறைக் கெட்டாத பரஞ்சுடரைத் தரிசி
க்குந் தன்மை நாயேம்—கிந்தவொரு பிறபபினிலே கிடைத்த
தெனத் தனைவியக்கு மியல்பிற ருகி. ()

என்போடு மழுவெடுத்தார் தமைமடுத்த புகழனைத்து மிசை
யா துள்ளத், தன்போடு படித்தமல னருள்சார்ந்த முகனோக்கி
யமலா நாயேன், முன்போல வானகமுற றினிதிருக்க நினதுப
த முடிவிலெய்த, வென்பேரா னீதீத்தம் பதிவிளஙக வருடியெ
ன வியம்பிற் றன்றே. (ஞக)

இயம்பியுகேட் டருளீச னினியிந்த வடிவொழிந்தி யா
ழோ ஞகி, நயம்பாவு துறக்கல நணிறுகாந்து முடிவினமை

ந்தருவன் அநேகமடவாருடன் நீர்விளையாடல்செய்துகொண்டிருக்கையில வீணைமீட்டிச சாமகானமசெய்துகொண்டு நாரதமாமுனிவர் அவவிடத்திறகுவநதனர்.

இவ்வாறு நாரதமுனி வருதலைக்கண்ணுற்றும் சிறிதுமதியாமல் மாதர்கள் மோகத்திலே மயங்கி அவருடன்சிராடுவதே பெரிதென்றுமதித்துக் களிக்குஞ்சித்திரன்மேல் முனிவருக்குக் கோபம்பிறந்து ஓர்கோகிலமாய ஆருகவெனச் சபித்தனர், உடனேயதையறிந்தசித்திரன் முனிவரைவணங்கி அடியேன்செய்தபிழைபொறுத்துச் சாபநிவர்த்தி யருளவேண்டுமென வேண்டினன் முனிவர் கந்தருவனைநோக்கி நீபூலோகத்தில் ஆமலகவனத்தில ஓர்குயிலாய்ப்பிறந்துபொருநைமூழ்கிச் சுவாமி காசிபேச்சுரரைப் பூசித்துச்சிறிதுநாள்வணங்க இச்சாபந்தீருமென்றருளியகன்றனர்.

உடனே மடவார்யாவரும் அழுதகண்ணும் கண்ணீருமாய்த் தங்களநாட்டிற்சென்றனர் கநதருவன் பூலோகத்திற் பாண்டியதேசத்தில் ஆமலகவனத்தில் ஓர்குயிலின்கருவிலுதித்துக் காக்கையால் வளர்க்கப்பட்டுக் கடைசியாய்த்தாயுந் தந்தையுமின்றித் தனியாய்அவ்வனமுழுவதுஞ்சஞ்சரியாநின்றனன்.

முனிவர்களே மாதர்கள் மோகம்,தேவர்வகுப்பினைச்சார்ந்த கந்தருவனுக்கும் கர்மபூமியிலஓர்பறவையாயப் பிறந்திவ்வாறுழலும்வண்ணந் தீமையளிக்குமெனறால் மற்றுமானிடரை என்ன பாடுபடுத்தாது.

இவ்வாறு குயில் அவ்வனத்திற்சஞ்சரிக்கையில் ஓர்நாள் அவ்விடத்தில் ஓர் ஆலயமிருப்பதையும் அதறகுள்மணி சொரூபமான ஓர்இலிங்கமிருப்பதையுமவிண்டு பிரமா தேவர் முனிவர்முதலானவர்கள்சன்னதியில்வணங்கிப்பிரசாதம்பெற்றுத்தங்கள் தங்கள்உலகங்கட்குச் செல்வதையுங்கண்ணுற்றுப்பூர்வக் ஞானவிளக்கமுற்றதாய் நாமும் இச்சிவலிங்கப்பெருமானைப் பூஜித்துநற்கதிபெறுவேனென்றுதுணிந்து அக்கோயில்அருச்சகர்முதலாயினை கைங்கரிய பரான் யாவரும் வெளிச்செல்லுங்காலம்நோக்கி அங்கோர் மரக்கிளையில் மறைவாயிருக்கையில் உச்சிக் கால பூசை நடாத்தித்திருக்காப்பிட்டுஅவர்கள்யாவரும்தங்கள் தங்கள்வீட்டிற்சென்றனர். உடனேகோகிலம் இதுவேகாலமெனத் துணிந்து பொருநைமாநதியில்நீராடி அத்துறையிற் கோயில் கொண்டிருக்கின்ற விநாயக மூர்த்தியையபூசித்து வணங்கிப்புகழ்ந்து காசி

பேச்சுரர் ஆலயத்தை வலங்கொண்டு உட்புகுந்து மகாலிங்கமூர்த்தியைக் கண்களாரச் சேவித்துப பொருணையிற்சென்று வாயகொண்டமட்டிலும்தெண்ணீர் மடுத்துமடுத்து அப்பெருமானுவக்கும்படி அபிடேகஞ் செயது சிறைகளால்வீசிச் செநதளிரகளேபத்திரமாகவும் வெள்ளியமகரநதப் பொடிகளே விபூதியாகவும் கற்பகமலரிலுள்ளதாதும் நீருங்கலந்ததே சந்தனமாகவும்பாரிசாதமலரின் மகரந்தமேகுங்குமமாகவும் மற்றையப்பூங்கொத்துகள்முடியிலும் மிடற்றிலும்பதங்களிலும அணியும் அணிகளாகவும் அணிந்து, வாயினுற் புடபஙகளேயெடுததெடுதத தருசிதது் சிவந்துஉலேந்த கனிவர்க்கஙகளேததையும் அபபெருமானஅமுதுசெய்யுமாறு அருளிச்சிவந்தமாந்தளிரோ தூபதீபஙகளாகவும் சிறைகளே சத்திர சாமரங்களாகவும் வெண்டாமரையிதழே கண்ணுடியாகவுமஉபசரித்துச் சன்னிதியணைஙகிநின்றுகண்களில் ஆனந்தபாஷ்பம்சொரிய அகமுருகி உரோமஞ்சிலிர்ப்புற்று சாமகானத்தையும்தமிழையும் ஓதத இனியசங்கீதங்களால்அச்சிவபிரான் செவிகளெலலாம் நிறைப்பிச் சிறிது நேரம்கண்களேமூடியோக முற்றவர்போலிருந்துபின்னர் அக்கடவுள்முடிமுதல் அடிவரையுள்ளதிருவுரு அனைத்தையுந்தெரிசித்து ஆனந்தசாகரத்தில் மூழ்காநிற்கையில சாயஙகாலமாதலும் அருச்சகர்முதலாயினேர் அவவாலயவாயில்வருதலகணடு உமாதேவியை ஓர்பாகத்திலுடைய அப்பெருமானமேல் மனமுங்கண்ணுங் கிடப்பவெளிவந்துமுனனிருநத மரக்கிளையிலிருந்து மறுநாளுமிவ்வாறே பூசைசெயயும் பொருட்டுக்காலம் நோக்குறறிருந்தது.

இது இவ்வாறுகக் கோயிலுட் சென்ற அர்ச்சகன் தான் முன்னணிந்த கோலமன்றிவேறுக் கோலமாயவிளங்கிய சிவலிங்கப்பெருமான் றன்மையைக்கண்டு மனம்பொறுது வருநதி அங்கரரசர்க்கறிவித்தலும் அரசனகோபித்து இததீஙகுசெயதார்தலேகளேத்துணிப்பேனனறு வாட்படையேநதிக்கோயில் வாசலில்வந்து நாடுநகரங்களிலுள்ளார் யாவரையும் அங்குவரும்படி யாஞ்ஞாபித்து விசாரிததும் ஒன்றும்வெளிப்படாமையால்வருத்தமுற்று இதுவெளிப்படுமட்டும் உண்பதில்லேயெனத் தீர்மானங்கொண்டு அருத்தசாமம்வரை தரிசனஞ்செய்து சன்னிதிதானத்திலோருழித்துயிலா நிற்கையில் சுவாமி காசிபேச்சுரர் ஓர் அந்தணன்வடிவெடுத்து அவன்சொப்பனத்திற்றேன்றி அரசனே யானிக்கோயிலில் எழுந்தருளியிருக்குங் கடவுளனனேப் பூ

சைசெய்ததிஙகோர் பூங்குயில், அப்பூசையே எனக்குஅத்தியந்தமபிரியமுள்ளது, ஆகையாலஅக்குயிலை விலக்கவும்வேறெனறுநினைக்கவும் வேண்டாம்எனறருளிமறைதலும் அரசனவிழித்து அருச்சகாமுதலானவர்க்கு அவ்வதிசயத்தைச் சொல்லி உண்மை தெளியும்பொருட்டு அடியேனமனத்திலெழுந்தருளிய பதஙகள் சிவந்தனவோ? என்றிரஙகிக் காசிபேச்சுரரையும் மரகதாம்பிகையையுமவணஙகித் தனனரண்மனைசென்றனன. அன்றுமுதறகுயில்முன்சொலலியபடி சிலகாலம் பூசைசெயதுவருகையிலஓர்நாள பொருநையில்மூழ்கிவிநாயகமூர்த்தியைப்பூசித்துஆலயத்துட்சென்றுகாசிபேச்சுரரை அருச்சிததுவணஙகிஅடியேன படுந்துனபமெல்லாம்நீஙகி யுன்னருள்பெறுங்காலமுண்டோஎன்றும, சோலையிற்றிரிந்து சஞ்சரிக்கின்ற குயிறபறவையாயச் சனித்துபுலஙகள் போம் வழிமனதைச் செலுத்தும் நீசனாகிய எனனையோராளாகக்கொள்ளாயோஎனறும்,புனனகையுடன் அஞ்சேலெனறொருவார்த்தைவிள்ளாயோஎனறும், பற்பலபுலம்பிவேண்டுகையில அக்குயிலினமொழிக்கிரஙகியபரமேச்சுரன் அவ்விலிங்கத்திலிருந்துமரகதாம்பிகை சமேதராய்க் கணபதிசுப்பிரமணியா இருபககத்திலும்விளங்க இடபாரூடராய் வெளிப்பட்டு, அப்பிகததை நோககிக் கோகிலமே நீ செய்தஅபிடேகம் இந்திரன்செய்த சகத்திராபிடேகத்திலும் மேலானதென்று களித்தோம், புலிததோலுடையினும் நீயளித்ததளிருடையேமேன்மையெனபபுனைந்தோம். நீ செயத அருச்சனை திருமால் செய்த நயனார்ச்சனைபோலுந திருப்தியடைந்தோம். நீயளித்த அருஙகனிகள் தேவாமுததிலுமேலானதென்று விரும்பி அமுதுசெயதோம், நீ செயதஉபசார மேலோர் செயயுமுபசாரத்திலும் மேலாக மதித்தோம், நீ செயதபக்தியால அளவறறசநதோஷமுறறனமுனனுலுதையமானோம், ஆகையாலுனககு வேண்டும் வரமனைததையுமதரக்கருதியிருக்கின்றோம் கேட்பாயாகவென்றருளலும் கோகிலம் ஆனந்தசாகரத்தில் மூழ்கிக்களித்து அப்பெருமானை வலம்வந்து தாழ்ந்து வேதங்களுங்காணாத கடவுள் காணக்கிடைத்தனரெனத்தன்னைத்தானே வியக்குந்தன்மைத்தாகிப் பறபல புகழ்ந்து பாடிக் கடவுளே நாயேன் சாபம்நீஙகி முனபோல் வானகத்தின்பம் அனுபவித்து முடிவில் உன்பதம்பெறல்வேண்டும், என் பெயரால் நீயும் நான் மூழ்கிய தீர்த்தமும் இப்பதியும் விளஙகல் வேண்டும் என்றியம்பியது.

கச்அ கோகில தீர்த்தச்சருக்கவசனச்சுருக்கம்.

அதனை ... டருண் மூர்த்தியாகிய சிவபெருமான் அக்குயிலை நோக்கி ... கேட்டுக்கொண்டபடியே இச்சாபவுடலை நீத்து வானகத்தினை ... முற்று இறுதியில் நம்முடைய பதம் பெறக்கடவை இன்றுமுதல் ... ம்பெயர் கோகிலேச்சுரனெனவும், இந்நகர்கோகிலபுரமெனவும், உன்னாற் பூசிக்கப்பட்ட விநாயகர் கோகிலவிநாயகனெனவும், நீடூழிவிளங்குகவென்றருளித்தேவர்கள் பூமாரிசொரிய மரகதாம்பிகை கணபதி சுப்பிரமணியர் இவர்களுடன் இலிங்கத்துட்கரந்தனர். சாபவடிவம் நீங்கிக் கந்தருவன் வானத்து மடவாருடன் களித்து வாழ்பவனானன்.

முனிவர்களே இக்கோகில தீர்த்தம்போலொருதீர்த்தமும், இக்கோகிலம்போலொருபக்தரும், எவ்வுலகத்திலுமில்லை. தீராத சாபவினை தீர்த்ததாயுள்ள இந்தக்கோகிலதீர்த்தத்தை ஒருவேளை சிந்திததாரும் அருமைச்சிவஞானச் செல்வராவார்கள். என்றால இதில் மூழ்குவார் அடையும் பயனை யாரால் அளவிட முடியும். இச்சரிதம் கேட்டாரும் எழுதினாரும் பாராயணஞ்செய்தாரும இறுதியிற சிவகதிபெறுவார்கள், என்றுரைத்தசூதமுனி மேற்கூறலரானார்.

## கோகிலதீர்த்தச்சருக்கவசனச்சுருக்கம் முற்றிற்று.

---

### பதினென்காவது
## புருடோத்தம தீர்த்தச்சருக்கம்.

வான மடுத்த மணிமாட மறுகு மருங்கின் மடமாதர்
கான மடுத்த நடத்தமுகு கண்டோ திமங்க ளரம்பயர்க
டான மடுத்துப் பயிற்றியவர் தந்தவமுதப் பரிசருந்தி
மீன மடுத்த தடமலரின் மீண்டு களிக்குஞ் சிரீநகரில். (க)

மதியாற் குருவைக்கலைபயின்ற வலத்தாயிரக்கஞ்சேடனைப்புன்
னிதியால் வடாது காவலனை நெறியான் மனுவை நலறுகருங்
கதியால் விபுதர் நாயகனைக் கவினன் மதனைக் கடுத்தல்கோர்
பதியாய் விளங்கு மதிவீரன் பாரா தரித்து வருநாளில். (உ)

கங்கா நதியின் மூழ்கியொரு கனமா மறையோ னங்குறவு
மங்கா தனத்தி லவனிருப்ப் வாய வருளிப் பூசித்து

மங்காப் பிரம மணிவிளக்கே மற்றென றனைக்கேட் டறியமன
மிங்கா தரத்தி னெழுந்த தென விசைபபா யென்ன மன்னிசைக்
கும். (௫)

யாதே செய்யவ மாங்கதனை யடைவாறேற தருளென்ன
மாதே வனையே தெய்வமென மறைநா ருணாக்கு மிருவருக்கு
மீதேதணிவா மெமக்குமஃதே யிவனுறுடொழுதற் கேற்றநெறி
மூதே பலவா மவையுள்ளு முதல்கே ளென்றே முனிபுகலும். ()

எங்கு நிறைந்த பரசிவனே யெவர்க்கும் பெரிய னிவனிருதா
டங்கு மனத்தி னடியவரோ சாலப்பெரியரிவர் தொண்டிற
கங்குல் பகலா நிற்பதுவே கடைய கறுத்த கண்ணுதலார்
பொங்குங் கருணைத் திருவடியிற புனைவித்தருளு நெறியாமே ()

ஆணிற் பெரியா ரானடியா ரடியார்க கடியார் பெருமை யுரை
தாலெற் கரிதே யாதலினுற் றலைமை யடிமைத் திறமுடையோ
ஞானிற றுளவ மணிமாயோ னுவனறனடிமை நீயாகிற
ன்றகருளுங கதியெய ப பணித்தான் குமரிக்ககனறனருளல.

புனி ாகரனங ம ரு வ ர ,போன் முன்றோர்வேதியர்க்கா
யனியயத்த ந ட ட ட ங்கனைத் தருவோடு
துணியாங் செ ர கா ா தோறறுந்தாக கேச்சுரனர்
முனிவரங ை ர ரதுதிமன முழகரும் புருடோத தமமா
யோன் (௭)

தனக்கேயடிமை ர ன ந ந பருதிியெனத்தன் மனத்தின்மகிழ்த்
தினககாவ ரு ம ைசச கறு நிருககாயாக கருளும் வேதியரும்
வணக்கா ரிசையா தககமொடு மகிழ்ந்து கடந்து நீருண்ட
கனககோமளதுய பெரு ாடன கனகாலயத்தி னிலையடுத்தே.

கங்கா சலததா விளநீரா ற கதலி முதலாங் கனிகளினுற்
கொங்கார்சந்தக் குழம்பதினுற் குளிர்நீராட்டிப்பொன்னுடை
யங்கா தரதினணி திருத்தி யாரமணிவித் தருச்சனைகள்
பங்கேருகத்திற் புரிவித்துப் பணிந்து துணைக்க ணீர்சொரிந்து.()

கண்ணுவுலக மனைத்துமுந்திக் கமலத்துதவி யளந்தமுதி
லுண்ணு தரத்தி லுண்டருளி மீட்டு முதவு முதறிதிகழ
வண்ணமலரா தனத்திருக்கு மணியை மறுவைக்கவுத்துலத்தைத்
தண்ணுர் துளவை வேய்ந்தழகு தழைத்தோ யெனத்தான் முடி
த்கணிந்து. (௰)

அருமபுவியிற பாதியணி யாரா மஙஙளா வினைமாக்க
ணீளுநதடஙக ளாதனங்க ணிதிநெறசூலைகள் பலகொடுத்து
—ாளுந்திருநா ணடந்தேற நடபபிபபதுவே மேலான
கோளுமபுகழுங கோனுமெனக் குறிததான் குயிறறிவாளுணன்

குடக்கே கதிர்வக் துதித்திடினுங குறையாக்கடலும் வறண்டி
டினுந—தடசசா னவிநீ ரனுதினமுங தவறு தெடுத்து வரபபணி
நதுக—கடக்காரானை தனைக்காத்த கரியோன் புருடோத தமா
க்காட்ட—னடததாதிருப்ப திலெயெனுமோா நலஞ்சேர் விரதந
தலை நயநதான். (யஉ)

கஙகை மடுதது வருவார்க்குங் கஙகை மடுப்ப நடப்பார்க்குந்
தஙகை நிறையப பொருள்வாரிப் பொழியுநதாததா லலர்மேய
மஙகையடுத்த மணிமார்பன வரதன் புருடோத தமமாலோ
னஙகங்குளிர வனுதினமும் மபிடேகஙகள் சிறந்தனவே. (யங)

வேறு.

இம்முறை நெடுநாளா விமையவர் நதிநன்னீர்
மைம்முகில வடிவாளர் மகிழ்தர வபிடேகஞ்
செயமமுறை தவறுது தினமளவிற செலவுந்
நம்முறை புரியணியன றளர்தர மூததாளுல். (யச)

நடைதர லரிதாளு னரைதிரை முடிவாளு
னிடைவளை வுறலாளு னெயிறணி யிலையாளுன்
றடைபடு மிடறுளுன் றளர்தரு மொழியாளுன்
முடையிய முடலாளுன முடிவெதிர் கொளலாளுன். (யரு)

வாவென விடுகாடு போவென வளாவீடு
நோவொரு புடைகுழுமி நுழைதரவதனுலே
வாவியு முடலோடங கமர்தர லரிதெனனத்
தாவிட வெளிபாயுந தனமைய தாயினளுல். (யசு)

அனனவ னித்தகையா ளுயினு மிறுதிககும்
பொனனிதி யாசிற்கும புந்தி கலங்கிலன் மால்
தனனை நெடுங் கஙகைத் தண்புனலாட்டு செய
லுன்னி யறுஙகொலெனை வுள்ள மழுஙகுவனுல். (யஎ)

சாவது சிறிதாகத் தாமரை நயநற்குத்
தூவியல வானதிநீர் சொரிதரல் பெரிதாக

வாவி நீணைநதழிவா ளூழுக லொனறுபெருன்
பாவ மெடுத்தவினை பாழ்படி லெனறயாவான. (௰௮)

ஊனை மறநதனனமற றுடையை மறநதுடலம
பேண மறந்தனனோ பித்தனெனத் தகைவாயந
தேணமர் நமபெருமா ளெழிலி நிறபெருமா
ளாணமர் நம்பெருமா ளாலய முற்றனனால. (௰௯)

வேறு.

உற்ற மன்புரு டோத்தம ருபயதா மனைமேற
பறறு மனபினாற் பறபல பழிச்சினன பணிநது
கற்றைவார்சடைக் கண்ணுதற கருணையம பெருககம
பெறற பேறினான் சனனிதி னினறிவை பிதறறும. (௨௰)

இச்சை யாருயிர் போகுநா ளடுத்ததங்கிதறகோ
ரசச மெய்தில னடியனேன விரதமா யாறறு
நிச்ச நிறகபி டேகமா நிருமலக் கங்கை
மெசச வாட்டுதல் தவுங்கொலென றஞ்சுகின் றனனால் (௨௧)

எளிய னுருயி ரோகினு மிறைவநின் றனக்கு
வெளிய கஙகைநீ ராட்டுத லாகிய விரத
மிளித லின்றியே நடைபெறற கேறறதோ ருபாய
மளி பெறறருளை யடுத்தன னருளுதியெனறுன். (௨௨)

இனனவாகிய காலையி லிரவி சென்றடைந்தான
மனனர் மன்னுனுத் துறந்தனன மறறவாலயத்துச்
சன்னி தித்தலை கிடந்தன னுரஙகிய தருணம
பொன்னணிந்தருண் மார்பனோர் பூசுராகி. (௨௩)

காவலனகன வெயதிநீ கஙகுவ தெனனை
மாவலம்பெறு வான்சுடர் மேடமா மறுகு
போவதாகிய திஙகளோர் பதினைநதிற புகலதற
காவதாகிய நாடகதி ருதித்திடு மமையம. (௨௪)

தூய நஞ்சின கரத்துயர் கோபுரததுவிச-
சாயை யாங்குறு மாங்குநந துளபமுஞ சாநது
மேயதாகுமத் தலத்தினில் விளைவினை ராவி
நீயமைததிடி னிகழ்தர நீடு நினைவிரதம. (௨௫)

அந்தப்பாழியிற் கீங்கையு மெழுனையு மமலச்
சநதப் பாரதி நீத்தமுந் தழைத்தெழுநதுலவு

மெய்நச்சீரிய தீர்த்தமு மீதற்கிணை யிலையா
மிநதப்போபெறு தீர்த்தமெய்த் தனக்குமே யினிதாம் (௨௬)

ஆகை யாற்புக லம்முறை யாற்றுவையாகி
லோகையாகுமின் விரதமு நிலைபெறு மதனுன்
வாகையாகிய சிவகதி வாயக்குமென றுரைத்துச்
சூகை காத்தருள் தூயவன் சொல்லினன மறைநதான். (௨௭)

மாயனுகிய வேதியன் மறைதலும் விழித்துந்
தேய மன்னவன் களித்தனன் செஙகண்மா லருளி
தாயதன்மையென் றகமுறத் தெளிநதனனுக
நோயகன்றன ஞன்றவர் விழைவுறா றுறுமோ (௨௮)

அன்றுதொட்டிமா லாலயந் தமர்நதனன் வாழ்ந்தா
னன்றுசிந்திலாத் திஙகள்வர தடுத்தது நடுநா
ளனறுதித்திடு காலையி னெரிமணித்துவி
நினறுபற்றிய சாலியசேர் நிலத்திடை யடுத்தான். (௨௯)

மாலளித்தவா றூர முர் ஆளவமு மலகுங்
கோலமுறநிடங கண்டனன குதுகலித்துடனே
சீலமுற்றிய சிறுசூழி கோண்டனர தெணணீர்
சாலமுற்றிமேற் பொஙகுமோர் தன்மைகணடுவந்தே. (௩௰)

மூவகைப்படு தீதமு முப்புடை யெழுதல்
யாவருக்குமங் கறிதர வணிமணி யாரக்
கோவைபோற் சிலை வினையிறை குண்டமூன்றுக்கி
யாவலாற்பெரு மாட்சயி டேகமாற் றினனுல். (௩௧)

இந்தமூவகைத் தீர்தமு மியன்முறை யெடுத்துச்
சநதமார்புரு டோத்தம நாயகர்ககாட்ட
லெந்தநாளிலு நடைபெற விருபிறப்பாளா
சந்ததிக்கெலாஞ் செலவினை நிலம்பல தந்தான். (௩௨)

மன்னனின்னவா றுயுனுன் ளாவிலுமயோன்
றன்னைக் கங்கையே யெமுனையே சரச்சுதி யேயா
மன்னுகின்றமுக் குண்டநீர் மல்கவாட்டுதலா
லுன்னுகின்றபே ரின்பமுற் றுலகிடைச் சிறந்தே. (௩௩)

நாரணப்பதி யடைதலு நாரணன் மகிழ்ந்து
சீரணங்குப சரித்துமே லுழைந்தனன் செனறு

காரணங் கடந் தொளிர்தரு கண்ணுதற் கடவு
ளாரணம்புகழ் கயிலைசென் றடைந்தனன் மகிழ்ந்தான். (ருச)

செம்மையாகிய தவத்துறை சிறந்தமா தவதீர்
மும்மையாம்புரு டோத்தம தீர்த்தமா முதன்மை
தம்மை யாருளா கிற்பவர் தாமரைத் தடதால்
வெம்மை யாங்கரீ பிணிப்பவர் மேதினிக் கெவரோ. (ருரு)

வேறு.

தவமான மகசித்தியஞ் சந்ததமுந தொருத்ததனும் றன்னேரான
சிவமான சிவலோகந் தமக்குரிமை புரிந்தருளுஞ்சிறப்பினிற்பீர்
பவமான பிணிதவிர்க்கும் புகனறபுரு டோத்தமமாம் பரமதீர்த்
தக், குவமானங் கடந்ததனை மறமுளதொன றஃதினையு மு
ரைப்பக் கேண்மின். (ருசு)

ஆதியிலே வானவர் நாட் டணிகிளருங் கணிகையரா மரம்
பைமாதர், சோதியிலே சிறந்தகுரு தனைவணங்கித தாரணியிற
சுழலும்பாவ, சோதியிலே யிரணகளத் திறந்தாலு மொருமகமா
ங் கியற்றினுலு, நீதியிலே யிவரறத்தி னெல்லைவளா கலாதிட
லாய நிகழ்கின் றேருமால். (ருஎ)

புண்ணியத்தி னெல்லைவளா புல்லிடினு மவரவர்செய் புலை
யாம் பாவ, நண்ணிடுதல சிறிதாகு மஃதனறி நாயகமா நாங
களகொண்டோ, மெண்ணிடுதற கரிதாகு மிதில்வருபா தகமு
முளே மிவைகளாறபொன, மணணியவெம் மேனியெலா மா
சடைந்தே மிவைதீர வழுத்தி யெனறுர். (ருஅ)

ஆங்கதுகேட் டமரர்குரு வரம்பையர்கா ளப்பாவ மகல
வேண்டி, னேங்குதிரைக் கடலிடத்தி லுமலக வலத்தினமுன
ரெரித்தாட் கொண்டார், நீஙகலறு சினகீஙக வருபுருடோத்
தமப்பெருமா னிலஙகுங் கோயி, லோங்குபுரு டோத்தமமா
மொருமூன்று நீத்தத்து முவந்து மூழ்கி. (ருகூ)

குருகான பரியாளர் குயிலேச ரெரித்தாட்கொள் குழகர்
தம்மை, யொருகால மாயிடினும் வணங்கி யிவண் வருதிரொன
வுரைப்பத் தென்பால், வருகாலங் கசைந்தாலு மொசியுமிடை
மடவார்கள் வான நீங்கிப், பெருகீத லுடனெல்லி வனத்
தொருபாற் பெருங்கோயிற் பெயர்ந்து வந்தே. (சுய)

முக்குண்ட நீராடி முகுந்தனிரு பதமலர்கண் முடிமேற் சூடி, யக்குண்ட மிடறுள னொிந்தாட்கொள் வரித்தோல ரகிலமீன்ற, விக்குண்ட மொழியாளோ டிவர் பதங்க டொழு தேத்தி யிழிவா மாசு, கக்குண்ட நோயதீர்ந்து வானகமுற் றினிமையுடன களிப்புற் றுராால். (சக)

வந்திடுநோ யகன்றுவு மற்றும்வரா தறிவோரம் மருந்து ண்பாா் போற், றந்தமழுக் ககன்றுவு மரம்பையர்க ளனுதி னமித் தரணிமேவிப், பந்தமறத் திரிகுண்டம் படிதல்கட வுளரடிகள் பரவலான, விந்தவினை தவிழாது விரதமென வனு ட்டித்து விளங்கு கின்றார். (சஉ)

தவமுடையீ ரிந்தீந்தத்தகைமைபல சிலபுகன்றேன் றபசெ பங்க, ளுவமையிலா வறங்கடநப் பணங்களொலா மிதின்மூழ் கி யுளுற்றுகிற்பாா், பவமகலு மிக்கதையைக் கேட்டோரும் ப டித்தோரும் படிப்பித்தோரு, மவமெறிவ ரிம்மைநல மனுபவி ப்பர் சிவகதிக்கு மாளாவாராால். (சஙு)

எம்மையொரு பொருளாகீர் மதித்தறைதி யெனத்தலைகொ ண்டேழுநீத்தச், செம்மைபெறு சரிதமெலா மூனைத்தனமெ ன்றெருகுதன் செப்பக் கேட்டங, கிம்மையிலே சிவம்பழு த்த தவம்பழுத்தா ரெல்லோரு மிமவானீன்ற, வம்மயிலோா புடையிருந்தார்க் காற்றுதவப் பேருநீ யமர்ந்தா யென்றே.(சச

பல்லாறு புகழ்ந்தரனுா் பிரதாப சரிதமெனும் பரவை கொண்டு, நல்லாறு யாங்களுயப பொழிகின்ற வருண்மேக ஞான சூதா, மல்லாறு வணேந்தசடை வளர்காசி பேச்சுரனுர் மகிமை யெல்லாந், தொல்லாறு புகன்றிம்மை மறுமைநல மளி த்தியெனச் சொல்வதானுன். (சரு)

புருடோத்தம தீர்த்தச்சருக்கம்
முற்றிற்று.

---

பதினொன்காவது
## புருடோத்தம தீர்த்தச்சருக்கவசனச்சுருக்கம்.

முனிவர்களே அன்னப்பறவைகள் வானளாவிய மாடத்தி ல் நாட்டியப்பெண்கள் கானத்தோடு நடனஞ்செயதலைக்கண்டு

பழுதி வானுலகத்தரம்பையர்க்குக் கற்பித்துக்கொடுத்து அவர் சம்மானமாகக்கொடுக்கும் அமுதத்தைப் பானஞ்செய்து மீண்டு தடாகத்தில் விரிந்த தாமரைப்பூவில் வீற்றிருந்து களிக்குஞ்செழிப்பினையுடைய சிரீ நகரத்தில் புத்தியால் வியாழனையும் கலவியாற் சேடனையும் செல்வத்தாற் குபேரனையும் நன்னெறிநடத்தலில் மநுச்சக்கரவர்த்தியையும் இன்ப நுகர்ச்சியிற் றேவேந்திரனையும் ரூபத்தில் மன்மதனையும் ஒத்தவனாயுள்ள அதிவீரனென்னும் ஓர் அரசன் அரசாட்சி செய்து வருகையில் கங்காயாத்திரை செய்து மீண்ட ஓர் அந்தணன் தன்முன் வருதல்கண்டு உபசரித்து ஒன்று கேட்க நினைக்கின்றேனென்ன வினவலும், வேதியன் அஃதியாதென அரசன் சொல்லத்தொடங்கினன்.

ஓ அந்தண உலகத்தில் முதன்மையான தெய்வம் யாது அத்தெய்வத்தை வழிபடும் வழியாது சொல்லியருள வேண்டுமென, முனிவன் அரசே மகாதேவனாகிய சிவபெருமானே முதன்மையான தெய்வமென நான்குவேதங்களுஞ் சொல்லுகின்றன. பிரம விஷ்ணுக்களும் இவ்வாறே துணிந்திருக்கின்றனர். என்றுணிபும் அப்படித்தான் சிவபெருமானை உபாசிக்கு நெறி பலவாயினும் அவற்றுள் முதன்மையான வழி யொன்றுளது அது யாதென்றால் சர்வ வியாபியாகிய சிவபெருமானே யாவர்க்கு முதன்மையான பெரியோன். அப்பிரானிருசேவடிகளையுஞ்சதாகாலமும் தியானஞ்செய்துகொண்டிருக்கும் அடியார்கள் அவனினும்பெரியோர். அவ்வடியார்க்கு இரவும் பகலும் தொண்டுபூண்டொழுகலே சிவகதி சேர்தற்கு நெறியாகும் அடியார்க்கடியார் பெருமையை யெவராலு மளவிடமுடியாது. ஆகையால் சிவபத்தரில் முதன்மையாயுள்ளவன் திருமால் அவனுக்குத் தொண்டுபூண்டொழுகுவையேல் சிவபிரான் உனக்கு நற்கதிகொடுத்தருளுவன் எனவுரைத்துக் கன்னியாகுமரி நீராடச் சென்றனன்.

இவ்வாறுரைத்துப் பரிசுத்தனாகிய முனிவன் சென்றவுடன் அதிவீரன் முன்னோர் அந்தணனுக்காய ஆதிசைவனை யெரித்த சுவாமி தாரகேச்சுவரர் கோபம் நீங்குமாறு வணங்கிப் புகழ்ந்த சிவபக்தாக்கிரகண்ணியனான புருடோத்தமப்பெருமாளுக்கு அடிமைத்திறம் பூண்டொழுகலே நலமெனமதித்து, அளவற்ற அரசர்களும் அமைச்சர்களும் வேதியரும் தன்னைச்சூழ்ந்துவர மனைவியருடன் ஸ்ரீபுருடோத்தமப்பெருமாள் ஆலயத்திற்சென்று கங்காதீர்த்தம் சந்தனக்குழம்பு முதலானவைகளால் அபிடேகஞ்செய்வித்துத் தாமரைமலர்களாலருச்சனையும் புரிவித்துப் பற்பல புக

ழ்ந்து வணங்கித் தன்இராச்சியத்திற் பாதி அப்பெருமானுக்க ளித்து நாளுந்திருநாளாகப்புரிவதே தமது கடமையும் புகழும் செங்கோலு மெனத்துணிந்து அம்முறை பெறச்செய்வித்து அ டிமைப்பட்டொழுகுவானாயினான். சூரியன் மேறறிசையி லுதி த்தாலும் சமுத்திரம் வற்றி வரண்டாலு மப் பெருமானுக்குக் கங்காபிடேகம் நாடோறுஞ் செயவித்தலிற்றவிராமல் நடத்தி வருகின்றதாகிய ஓர் விரதத்தைக் கைக்கொண்டனன். கஙகா தீர்த்தங் கொண்டுவந்தவர்க்கும் கங்கைக்குச் செல்லப்பட்டவர் க்கும் வேண்டுந் திரவியமளித்து அப்பெருமானுக்குக்கங்காதீர் த்தம் நாடோறும் அபிடேகமாகிவருவதைக் கண்ணுற்றுக் களி த்துச் சுகமாய் வாழ்ந்து வருகையில்வயோதிக திசையுற்றனன். காடுவா வீடுபோ வென்னு ம நிலைமை பெற்றனன். ஆவியும உட லை வெறுத்து வெளிச்செல்லுங் காலமு மடுத்தனன். ஆயினும் ம ரணத்திற்குச் சிறிதும் அஞசவில்லை இறந்தாற் பெருமானுக்குச் செய்துவருங் கஙகாபிடேக நின்று விடுமே யென்று அஞ்சி வரு ந்துவானாயினான்.

இவ்வாறு மரணஞ் சிறிதாகவும் பெருமானுக்குச் செய்யும் கங்காபிடேகம் பெரிதாகவும் எண்ணி வருந்திய அரசன் அவ்வ பிடேக மெக்காலத்தும் நடைபெறும் பொருட்டுச் செய்யு மோ ர் வழியுந்தோன்றாதவனாகி உண்பதும் உடுப்பதும் மறந்து மதி மயங்கி ஐயோ விரத பங்க முற்றவர் நரகடைவா ரென்பார்க ளே என்செயவோ மென்று கதறி துக்க சாகரத்தில் மூழ்கினவ னாய்த் திருமாலாகிய ஸ்ரீ புருடோத்தமர் ஆலயத்திற் சென்று வணங்கி உள்ள தெல்லா மப்பெருமானுக் கறிக்கை செயது இர விலும் உண்ணாமல் அவ்விடத்திலேயே மயங்கிக் கிடந்தனன்.

இவ்வாறு வேந்தன் தன்னை மறந்து கிடந்த அத்தருணத்தி ல் அப்பெருமான் மனமிரங்கி ஓரந்தணன்வடிவுகொண்டு அவன் கனவிலெழுந்தருளி அரசே ஏன் அஞ்சுகின்றாய் சித்திரைமாதம் பதினைந்தாம தெய்தியிற் சூரியோதய காலத்தில் இக்கோயிற் கோபுரத்துவியின் சாயை யெவ்விடத்திற் படுகின்றதோ அவ் விடத்தில் நம்முடைய பிரசாதமாகிய துளபமுஞ் சந்தனமும் [illegible]யப்பெற்றிருக்கும், அவ்விடத்திலேயே ஓர் தடாகம் வெட் டுவாயாயின் கங்கை யமுனை சரசுவதி என்ற மூன்று மகாநதி தீர்த்தங்களும் வெளிப்படும் அத்தீர்த்தங்களையே நாடோறுமெ

டுத்தபிஷேகஞ் செய்விப்பாயாக இவையே எனக்கும் பிரியமுள்ளன என்றருளி மறைந்தனர் உடனே அரசன் விழித்துக் களிப்புற்றுத் திருமால் கருணையைப் புகழ்ந்து கொண்டாடி அன்றுமுதல் அவ்வாலயத்திலேயே வசித்து வருகையில் சித்திரைமாதமொத்தது பதினைந்தாந்தேதியிற் கோபுரத்தூவி நிழல் உதயகாலத்தற் பொருந்திய இடத்திற் பெருமாளுத்திரவின்படி துளவமுஞ் சந்தனமுமிடப்பதை அரசன் கண்டு களித்து ஒர்குளம் வெட்டுவித்தனன் அதிலிருந்து கங்கை யமுனை சரசுவதி என்ற மூன்று நதிகளும் வெளிப்பட்டன அன்றுமுத லப்பெருமாளுக்கு அத்தீர்த்தங்களையே யெடுத்து அபிஷேகஞ்செய்ய ஏற்பாடு செய்தனன். இவ்வபிஷேகம் நீடூழி நடந்தேற அருச்சகர் பரிசாரகர் முதலானவர்களுக்குச் சாசுவதமான மானியங்களும் அளித்தனன். பேரின்பவீடுற்றான்போற்களித்துவாழ்வானாயினன்.

இவ்வாறு அதிவீர மன்னன் பூலோகத்திற் சிறப்புற்றுச் சில நாள் வாழ்ந்து முடிவில் வைகுந்தஞ் சார்ந்தனன். உடனே திருமால் அவனை உபசரித்துத் திருக்கைலைக் கழைத்துச் சென்று அவ்விடத்திலேயே சுகமாய் வாழ்ந்திருக்கச்செய்தனன்.

முனிவர்களே முக்குண்ட தீர்த்தமென்றும் புருடோத்தம தீர்த்தமென்றும் பேர்பெற்ற இத்தீர்த்தத்தின் பெருமை முழுதும் எடுத்துரைக்க வல்லவர் எவருமேயில்லை. இன்னுமோர் சரித்திரமித்தீர்த்தத்திற்குள்ளது அதையுஞ் சொல்லுகின்றேன் கேட்பீராக, வென்று சூதமுனி சொல்லத்தொடங்கினார்.

ஆதிகாலத்தில் தேவரம்பையர் வியாழ பகவானை வணங்கி சுவாமி பூலோகத்திலிருந்து போரத்தொழிலும் யாகாதி கர்மங்களுஞ்செய்து வருகின்றவரைத் தழுவி வாழ்வதினால் அவர்களுக்குள்ள பாவங்களுமெங்களைச் சிறிது வருத்துகின்றது. அதனால் எங்கள் சரீரமெல்லாமங்கலுற்றது இந்நோய் தீரவொரு உபாயம் சொல்லியருள வேண்டுமெனக் கேட்டலும் குரு அவர்களை நோக்கி நீவிர் யாவரும் பூலோகத்தில் ஆமலகவனத்தில் கங்கை யமுனை சரச்சுவதீ தீர்த்தமென்ற புருடோத்தம தீர்த்தத்தில் மூழ்கி அப்பெருமானையும் சுவாமி காசிபேச்சுரர் எரிதராட்கொண்டவர் ஆகியகடவுளரையும்வணங்கிவழிபடில்தீருமென்றனன். உடனே அரம்பையர் பூலோகத்தில ஆமலகவனத்தில் வ

நது முகருண்ட தீர்த்தத்தில் நீராடித் திருமால் முதலான கடவுளரை வணங்கித் தங்கள் நோயனைத்தையும் போக்கிக் கொண்டனர். அன்றுமுதலனுதினமும் அம்மடந்தையர் அத்தீர்த்தத்தில் நீராடிவருகின்றனர்.

தபோதனர்களே இந்தப்புருடோத்தம தீர்த்தத்தின் பெருமையிற் சிற்சிலவே சொன்னேன். முழுவதுஞ்சொல்லவொருவராலு மாகாது. இத்தீர்த்தத்தில் மூழ்கி ஜபதபங்கள் தருமங்கள் தருப்பணங்கள் செய்தோரும் இக்கதையைக் கேட்போரும் படிப்போரும் படிப்பிப்போரும் உலகிலுள்ள இன்பமெல்லாமனுபவித்து முடிவிற் சிவகதியும் பெறுவார்கள்.

முனிவர்களே என்னையொரு பொருளாக மதித்து நீங்கள் கேட்டுக்கொண்டபடி எழுவகையான தீர்த்தங்களுக்குள்ள மகிமைகளைச் சிற்றறிவுக்கெட்டியவரை சொல்லினேனென்று சூதமுனி சொல்லவதைக்கேட்டு மற்றைய முனிவர்கள் யாவரும் அம்முனிவரை நோக்கிச் சிவபிரான திவ்விய சரித்திரமென்னுங் கடல்களைப் பருகிக்காய்ந்த பயிராகிய எங்கள் மேல் வருஷிக்கின்ற அருள்மேகமாகிய ஞான விளக்கமுற்றருணர்ந்தவனே, கருணைகொண்டு யாங்களெல்லோரும் நற்கதிபெற்று உய்யுமாறு சுவாமி காசிபேச்சுரர் சரித்திர மனைத்தையும் சொல்லியருளவேண்டுமெனச் சூதமுனி மேற்சொல்லததொடங்கினர்.

புருடோத்தம தீர்த்தச்சருக்க வசனச்சுருக்கம்

முற்றிற்று.

---

பதினொந்தாவது

காசிபேச்சுரச்சருக்கம்.

அதிதிமா தவமும் பொருளையாள் வரமு மமரர்தம் வயமுங்காசிபனூர்—துதியுநீள் புனித காசிப தீர்த்தஞ் சொல்லுழிச் சொல்லினும் பொற்றலை—விதியினால் வேத காசிப முனிவன் வியன மகம் புரிந்ததும் வேணி—மதியினா வேதி முனிதுதித்தெ ழுந்த வண்மையும் வகுத்தினி துரைப்பாம். (௧)

வேறு.

கமலனூர் மரபில்வந்த காசிப முனிவன் மேனாள்

விமலமா மோர்மகத்தை விதிமுறை புரிவான வேண்டி
யமலமார் முனிவ ராதி யழைத்தனர் வருதி ரொன்ன
நிமலமாா மறைகற் பார்க்கு நிகழுத்தின னவருஞ் சென்றார. ()

பேனமு நகதமுந்தும் பெருநதுறைத் தடமுஞ்சோலைக்
கானமுங் கறபினிற்பார் கருத்தெனக் கவினுமற்றைத்
தானமு மல்கா நின்ற தபோதனர் தமககு நாகா
வானவ ரொவாக்கு மேவ வகுத்தனா வருவதாரு. (௬)

பதஞ்சலி பரத்துவாசன் பராசரன விசுவா மித்திரன்
ததிமகா முனிபுலத்தியன சமதக்கினி சனாக குமாரன
சுதிபயில் வியாதன் யாசன் துருவாச னிரணய வனமன
கதமறு வியாக்கிர பாதன கௌதமன கலைக்கோட் டியோகன்.

அகத்தியன் பிருகு ரோமன அத்திரி மார்க்கண்டேயன்
சகத்துயர் வசிட்டன் பறபன் சச்சிதா னந்தன கறகண்
மகத்துவத் தியான காட்டன வான்மீகி சனக யோகி
வகுத்தயாழ் முனியே ரண்டன வரசுகன் சத்த கூனமன. (௫)

தேசினர் துசிதர் விசுவே தேவரோ யனிலர் சாத்திய
ராசுர ருருத்திரர்மா ராசிக ரணிகணத்தா
சாசர்குக் கியர்பூதாதி தந்திர ரரகக ரொக்கர்
கேசர ரரம்பை மாதர் கின்னரர் சிததராவோர்

அம்பரத் தலைவர் நாக ராகம புராண வேத
மிம்பரா ரரசரோனோர் யாவருந் திரண்டு முத்தாற்
செம்பொனுன் மணிக டம்மாற சிறப்புறக் குயின்ற வேள்வி
யும்பர்மண் டபத்திற் புக்கார் காசிப னுவப்ப மன்னோ. (எ)

மூவகைத் தலத்தினோர்க்கு முறைமுறை முகமன் கூறிப்
பூவகை சொரிந்து போற்றும் புனிதனைப் போறறி யுளளத்
தாவலி னதிதி தனனோ டமுதகீப பொருளை மூழகிக
காவண வேதி புக்கான காசிபன கடிகை கண்டான. (அ)

எவனலா தினைய செவ்வே ளெழிற்புயம வள்ளி புல்லா
ளெவனலா திறைவன் பூத்தே ரோகுத லில்லையாகு
மெவனலா லவுணர் பல்லோ ரீடழிந் திறவாதாவ
ரெவனலாற கருமமில்லை யவனகழ லேறறனு றன்ன. (௯)

அவிசொரி கிரகந்தாது வாமிக்கை சோம ராசா

சவிபெறு கருபுரோடா சம்மொடிந் தனங்காரானெய்
விவிதமாம் பாதவத்தால் விளங்கிய பொன்னுன் மண்ணுற்
குவிதரு கலங்க ளெல்லாங் குறைவர நிரப்பல் செயதே. (௰)

வழிபிதே யென்று முன்ன வருதிர்நீ ரொன்றும் வானத்
தழியுளார்க் குணர்த்த நினற வுயர்தரு யூபத்தம்பத்
தெழிலினு லளவால் வேண்டு மிலக்கணத் தமைநதவாகி
யழிவிலா திருபிறப்பி னணிபெறும் பசுக்க யாத்தே. (௰௧)

சேயவ னமல மூர்த்தி திருவரு ணடாத்து நெற்றி
யாயவ னயனமென்ன வப்பிரான றகைனி னுங்க
ணேயவர் தெழலா லெனறும் பிறபிலான் றன்னை யீன்ற
தாயெனப புகலச் செயதான் றழறழை யோம குண்டம். (௰௨)

காருக பத்தியந்தெக் கணுக்கினி கருது மறறைச்
சிருறு கவனீ யம்மாச் செப்பிய சுடர் விளங்க
வீரிரு வகுபபி னுரா லெழில்பெறு கிரியை யெல்லா
மேநற வதிதி யோடங் கிருந்தன னெதிரிலாதான. (௰௩)

ஆகம மொருபா லாதி யாரண மங்க மோர்பால்
வாகமர் புராண மோர்பால் வள்ளிய மிருதி யோர்பால்
பாகியல் கீதமோர்பால் பாணிமந்தளங்க ளோர்பா
ஸோரகை நாற் கவிகளோரபா லொழுங்குற முழங்குஞ்சாலை ()

பருவகல் லவிசு காட்டம் பாளிற வவை நெய போடு
சொரிதரு மணத்தாலவேதத் துயவரமுது செயயுங்
கருணையின் வாசந் தன்னுற கனிந்தவ நுவப்பச்சூடத்
தருமலர் வேரி தன்னுற் றரையெலா மடுக்குஞ்சாலை. (௰௫)

மண்டபம் விளங்குஞ் செயய மாணிக்க மணியாற் றூங்கு
தண்டா ளத்தானல்கு தக்கணைப் பசியபொனனுன்
மண்டனன் மூன்றுற் கட்டு மதிமணித் தோரணததால்
விண்டலம் புவனி யெல்லாம் விளங்குற விளங்குஞ் சாலை. ()

செவ்விசே நலக மெங்குஞ் செறிந்தபல் லுயிர்களெல்லா
மிவ்வழிச் சிறந்ததாலே யிறுதியில் விளஙகாநின்ற
நவ்விநேர் நோக்கி பாகர் நறுமலர்ப் பாதமொத்த
வவ்விய மவித்தசிந்தை யந்தணன் வேள்விச் சாலை (௰௭)

அந்தணு ரெம்மையாளு மனகனு ரெல்லா மான
சித்தனுர் தாமே மூன்று திருவுரு வெடுத்தா ரென்னோ

வைதிடு கபர்த்தமூன்று வகுப்பின்மே லெழுந்த தென்கோ
முத்தலைச் சூலமெனகோ மூவகைக் கனஸ்கடாமே. (௰௮)

அந்தணர் சமூகமெல்லா மானனம் வேதி நோக்கஞ்
சந்தமர் ஆணம்பாகு தருப்பை நீள் சடில மோங்கு
கந்தவெண் மேம் பூதி தோரணங் கலங்களாகப்
பந்தமின முனிவன சாலை பசுபதி போன்ற தன்றே. (௰௯)

திசைமுக மறைக்கூற்றுனூர் திருவகஞ் சிறத்தலானு
மிசைபெறத துதிக்கையானு மெதிரில்சத் தியங்கையானும்
வசையறு விதிமால் யானை மாமுகன செவவேளென்ன
நசையொடங குவமை கூறு நலத்தது முனிவன்சாலை. (௨௰)

வேதமுங் காலமூன்றும் விரிஞ்சன்மா னுளமும் பஞ்ச
பூதமுங்கடந்து நின்ற புனிதனே யுலகோ ருய்வா
னுரத்தெழுந்து தோன்றற் காயதோ ரிடமீதாயி
னேதமின் முனிவன் சாலை யெழிலெவ னிசைப்பதம்மா. (௨௧)

பல்வகை வகுப்பி னிற்பார் பகர்தரு வினுக்கட்கெல்லாஞ்
சொல்வகை விடைக ணல்குந் தூயகா சிபமா யோகி
நலவகைக் கிரியை யெல்லா நக்கனு யகர்க்கே யாகிச்
செல்வகை செல்கவெனறே சிநதையிற றியானஞ் செய்வா (

பொற்பூமர் மகத்தின் மேய புனிதமாம் பலனுள்ளத்து
தறபெற விரும்பானுகிச் சகலமு மகிலமோடு
கற்பனை கடந்து நின்ற கணனுதற் பெருமானுக்
யற்பிதமாகச் செயதே யருணமுனி விளங்குசாலை. (௨௩)

பத்தரார்ப் பரித்துப்பாடப் பண்ணவர் மலர்க வேச்
சித்தரோ டிருவ ராவோர் சிறந்தகா ரோடேனை
யெத்தரா தலத்தினுரு மிறைஞ்சிட வம்மை யோடங்
குத்தராக் கினியிலைய னுதித்தெழுந் தருளினுனல். (௨௪)

வள்ளத்தா ரையினுன் மேல் மல் வாரனல் வேதி நாப்பண்
வெள்ளத்தாழ் சடையா ங்கு விளங்குமோர் காட்சி நானுங்
தள்ளத்தா னரியயோர் மாதிபி னுவப்பர் செயய
வுள்ளத்தா மனாமே லாங்கி யொளிர்தரல் சிவனு மன்றே.()

அளிக்குமே லளி குமெங்க ளம்மையோர் பாகமாக
வொளிக்குமே லாளியாத் தோன்று மொருவனையுவந்துகாணுத்

சுத்தனே சுகமே துரியமுங் கடந்து தோன்றுமோர் சுடரொளி
ச்சுடரோ—பித்தனே நினது காட்சியான காணப் பெற்றிலேனா
கணகளாயிரமே. (௬௪)

மண்ணுமாய வனமாய வன்னியாய வளியாய் வானமா யுல
கெலா மாகிய, பெண்ணுமா யாணுயப் பிள்ளையா யணுவாயப
பெருமையாயப பேரிருளொளியா, யெண்ணுமா யெழுத்தா
யியமா யிதயத தெழுந்தமெய்ஞ் ஞானமாயிலங்கும், கண
ணுதானினது காட்சியான காண்பான கதித்திலேன் கண்களாயி
ரமே. (௬௫)

செய்யனே சிவனே சிவதலத்தருள்சேர் தீர்த்தனே மூர்த்
தியாயசசிறந்த, மெய்யனே வெள்ளி வியனமலை விளங்குமவீ
ரனே யாரழலிருக்கும், கையனே கருணைக கடலெனு மூன்று
கணணனே கடவுளா பிரானே, யையனே யுனது காட்சியான
காண வாயிரங கணபடைத் திலனே. (௬௬)

விமலமா கடலில விளிமபுற நெருங்கி வீங்கிருள் புறம்ப
டவுதிககுங, கமலநா யகர்க்குங் கதிரொளி சிறிது காட்டிய
கடவுணமா மணியே, நிமலனே நினைவா நினைவினின றருளு
நிருத்தனே யொருததனே நிகரி, லமலனே நினது காட்சியா
னகாண வாயிரங கண்படைத திலனே. (௬௭)

வேறு மடக்கு

அம்பரமா வுடையானே யாரணமா வுடையானே யருண
னெனனும், விம்பமுனத் தொளியானே வித்தாமுனத தொளி
யானே வேதங்கூறு, நம்பனெனு முருத்திரனே ஞானவர முரு
த்திரனே நாயேனுளளம், பமபநிலைத் தாண்டவனே பரமநிலை
த்தாண்டவனே பகவனீயே. (௬௮

பவனததா செவியானே பவலைத்தா செவியானே பகரு
நாரு, கவனதமீதா டேறுமனே கவனததோ டேறுமனே கதிாக
ளாபம, புவனததோ மேலானே புவனத்தோ மேலானே பு
கழாது யானக, சிவனததா பரத்தானே சிவனததா பரததா
னே கருணை செயயே. (௬௯)

மாதஙகததுரியானே மாதஙகத்துரியானே மலர்சிலைத்தான்
மா ரரியங கடநதானே மாதுரியஙகடந்தானே வளருத்துமபேரு
சாதிருககும் பணியானே சாதிருககுமபணியானே கால்கடிநத
பாதகங கைதததலையானே பாதகஙகைத் தலையானேன பணிகொ
ளவாயே.()

### வேறு.

வண்மையிற் சாகர மானவ னேகர மானவனே
யண்மையதாங்கழ லம்புய னேகழ லம்புயனே
கண்மலை யார்தவர் கட்குள னேதவர் கட்குளனே
யெண்வண மாங்கலத் தேற்றவ னேகலத் தேற்றவனே. (௪௨)

### வேறு திரிபு.

வரதா பரசங் கமர்கரத் தாய்கங்கை வார்சடையா
யரதா பரசங்க மங்கலந் தாயுந்து மம்புவியா
பிரதா பரசங்க மங்கடிர் தேயுனை யேத்துகின்றேன்
பிரதா பரசங் கமழமாமி யத்தநின் பேரருட்கே. (௪௧)

### சருப்பதோ பத்திரம்.

நீதா தாவே வேதா தாநீ—தாவா மீதா தாமீ வாதா
தாமீ காவா வாகா மீதா—வேதா வாமா மாவா தாவே
வேதா வாமா மாவா தாவே—தாமீ காவா வாகா மீதா
தாவா மீதா தாமீ வாதா—நீதா தாவே வேதா தாநீ. (௪௩)

### நான்காரைச்சக்கரம்.

கான வாரண வாசகா
காச வாவில ராரக
கார ராவணி நாயகா
காய நாடிடு வானகா. (௪௪)

### அஷ்டநாகபந்தம்.

தேவாதி தேவா வாகா மாமணிவேத
நாவா வாதா ராதனிமா நதவாச
காவா நீதாதா கைலாச பதே நாதா
மூவா முதலோகை நீ வாமா முதியோனே. (௪௫)

### உபயநாகபந்தம்.

பூதாதி யாபேதா போதா நிதா நாதா
தாதா சுதாதார தாபூதி தாமேலா
மாதான மாகாயூா வாகாதி காசிலா
வாதார பூதாதா யாளாக வாளுவையே. (௪௬)

### கோமூத்திரி.

ஆதி நாடக மாடிய மானவா
பாதி நாயகி யாகிய பாரகா

சோதி யாடக மாகிய வானவா
நீதி யாயத யாசெய நீரகா. (சஎ)

## முரசபந்தம்.

வான மாமலை யாடணி யாயினனே
தான மாமலை யாடணி யாயினனே
மான மாமலை யாடணி யாயினனே
வான மாமலை யாடணி யாயினனே. (சஅ)

## ஏகபாதம்.

மாவிலங்கணி யான வலத்தினு
மாவிலங்கணி யான வலத்தினு
மாவிலங்கணி யான வலத்தினு
மாவிலங்கணி யான வலத்தினு. (சகூ)

## மாலைமாற்று.

காவா தேவா வாதே வாகா
மாவா யாமா மாயா வாமா
தாவா வேதா தாவே வாதா
யாவா யாவா வாயா வாயா. (ருய)

## வேறு.

தலைதொடர் சிகழிகை யணிபவ சரணந்
தலைநடு கடையிலொா தனிமுதல சரண
மலையொரு சிலையென வணிபவ சரண
மரகத மணிபுடை மகிழுபவ சரணங
கலைநதி யொளிர்தரு சடையவ சரணங்
கதிர்மதி யனறிகழ விழியவ சரண
மலைகடல விடமிட றணிபவ சரண
மரகர சிவசிவ வரகர சரணம், (ருக)

கடமலை புலியத ளுடையவ சரணங்
கயிலையின் மருவி கயிலையசரணம்
படவர வணிதரு குழையவ சரணம்
பசுபதி பவபய குலகர சரணந்
திடமுறு புரமெரி நகையவ சரணந்
தினமவை நடுநட மிடுபவசரண
மடலெம துயிரடு மடியின சரண
மரகரசிவசிவ வரகர சரணம். (ருஉ)

## வேறு.

வாயார விவ்வாறு பலபுகழ்ந்து மகிழ்வெய்தி
வேயான தோளிதனை விதத்தகனை வலஞ்சூழ்ந்து
காயாத மலர்சொரிந்து கண்களிலா னந்தவெள்ள
மோயாதங் காருகி யொழுகவிரு கரங்கூப்பி. (௫௩)

முன்னிலையி னிற்கின்ற காசிபன்றன் முகநோக்கி
பொன்னிலையும் பேராம லிருந்தருளி யேற்றுகிறபா
றுன்னியவாங் குறுமாற்றி னுறவளிக்கு மொப்புரவிற்
றன்னிகரும் பெருமானார் தகவோடு தருளுவாரால். (௫௪)

ஒருநாலு முகத்தமல னுயர்மதலாய் நின்மகம்போற்
றிருநாளு மெமக்கமரர் செய்திலரால் றிருமானமுன்
பெருநாள மனைசொரிந்த பெற்றியினு நீசொரிந்த
மருநாளின் மலர்பெரிதே மற்றவன்றன் விழியினுமே. (௫௫)

பூதங்க ணிலைதாண்டி பேழான புவிதாண்டி
போதங்க வணிதாண்டிப் பொலிவுற்ற பதத்தணிகள்
வேதங்க ளறியாது வெவ்வேறு புகன்ற மொழி
நீதங்க வெதிர்நோக்கி நிகழ்த்தியதற் கிணையாமோ. (௫௬)

மகத்தாலு மருச்சித்த மலராலு மெய்ப்பத்தி
யகத்தாரு மன்பாலு முன்போல வன்பாகி
யிகத்தாரு முய்விப்பா னுமையோடிங் கெழுந்தனமாற்
சகத்தாரும் புகழ்முனிவ வேண்டுவன சாற்றென்றார். (௫௭)

அருளாள ரருள்செய்த வமுதான மொழிகேட்டுத்
தெருளான மகமுனிவன் சிவபெருமான் முகநோக்கி
விருளாகி யிருவினையு மினுமயக்கு நின்மாயை
மருளாகி யடியேனு பாயாது கொளல்வேண்டும். (௫௮)

முன்போறு புவிபிறந்து மூவாத துயரொடுதிப்
பின்போதங் கிறந்துபடிம பிறதெய்வம் வணங்காமே
யன்போடங் கடியார்கள் வேண்டுவன வருள்செயுநின்
பொன்போன்ற பதமலரே புனைமலராத் தரல்வேண்டும். (௫௯)

இன்பத்தி னிலையாக்கி யினிதாக்கிச் சிவமாக்கு
நின்பத்தி யெஞ்ஞான்று நீங்காது கொளல்வேண்டும்
துன்பத்தி லிவ்வேழை துஞ்சிடினும் வினைநீக்கி
யுன்பத்தி லொன்றாக வொன்றுதங் குறல்வேண்டும். (௬௦)

என்பேரால் யாருமி மிந்நீத்த மித்தகக
ரனபேறு நீவிளங்க வனுதினமும வேண்டினனுன்
மினபேறு மிடையாட னுயிராளுப் விதிமாய
னெனபேறு னியாளு யிலவையாவு மீதியெனறுன. (௬௧)

இவவாறு தவமுனிவ னியம்புதல்கேட் டெழின்மேய
செவவான பிகாயேணிச சிவபெருமான மாதவனைத
தவவாகத் தருவி நினை யொருதொழும்பர் தொல்லுலகி
லெவவாக வெனபபுகழநதா னுயா வரங்கள தரலானுன. ()

தணணியமா மணிவிளஙகு தாமரையா தனத்திருப்பானை
சணணியய மணியான காசிபமா முனிவரநீ
யெணணிய வணிசைத்தவெலா மினிதளித்தே மெமமை நாடறு
குணணிலவு மெஞ்ஞான முறவளித்தேம் பிறமாதே. (௬௩)

அடுத்தவரு நலப்பதி யெனதுகலை யமிசத்தின
மடுத்ததவக கயிலையெனு மவரமுனியா யுதிசதருளிக
கடுத்தபவத துலகிடத்தா ரிருவினையிற கலஙகாது
தடுத்தனைசாய கியயோகந் தனையுபதேசிபபாயால. (௬௪)

காசிபநீ சொன்முறையே கடலாடை புடையுடுத்த
காசினியி லித்தலமோ டிர்நீத்தங கருதெனபேர்
காசிபமா புரமெனறுங காசிபமா நீத்தமெனறுங
காசிபமா வரதமொன்றுங் காலமெலா நிகழதருமால். (௬௫)

நீசெய்த தவத்தாலே நின்கண்கள் களிகூர
வேசெய்த நயனியுட னிஙகெழுந்தா மின்றுமுதற
பூசெயச வடியார்க ளுளம்போலப பொதுப்போலத
தேசெயமு மறைபோலத திருநதியுட னிஙகிருபபே. (௬௬)

நினனீதகரு தனின்விதியி னீராடி நீறணிநது
ஈனனீதத் தெனையாட்டி நறுமலரால பூசித்துக்
கன்னீத்த மடக்கொடியோ டெனைபபுகழநது கதிரவனு
ரனனீத்த நாளொருகா லனபோடு பணிநதார்க்கும். (௬௭)

ஆசத்தின் மறறுள்ள வருத்தததி னசையின்றி
பூகததி னொருகலையின் வழியேற வுயிாபோக்கி
மாகத்தி னொருநாளையின் வருகினற வமுதுண்ணும்
யோகததி லெனைநாடி யிறகினற வுறுவர்க்கும. (௬௮)

வேலிடத்து மூசியினு மெல்லியதா ளொன்றானறி
நாலிடத்து மனனமூட்டி நாயிறுநோக் குற்றிருந்து
மேலிடத்த சோனைக்கும் வெய்யோற்கு மஞ்சாது
சேலிடத்த தெண்ணீரும் பருகாத செயதவர்கரும். (௬௯)

யாமிருக்கு மிக்கோயிற் கெப்பணிக ளியற்றினர்க் கு ங்
காமியமிட் காமியமாய்க் சுருதிமக மியற்றினர்க்கு
நாமமதி வாரமுத ளவிலகினற விரதமெலா
நேமமுட னிருப்பார்க்கு நெறிமுறையி னடப்பார்கரும (௭௰

என்னுமத் தொரு நாம மியம்பினர்க்கு மியம்பினளா
முன்னுகப் பணிநதமுத மூட்டினர்க்கு முறையாக
விர்நானி லத்திடத்தி லெய்திட்ட பேறளித்துப்
பின்னுலே நங்கதியும் பெறுமாறு புரிவிப்பாம. (௭௨-

அன்பாகே ளின்றுமுத லதிதியுட னரும்பொருளை
யுன்பேரால் விளங்குதுறை யூடாடி யெனை நாடி
மன்பாகு படுகின்ற காலமெலாம் வரன்முறையா
வின்பாகு பூசையெலா மியற்றுவதே வினையாகி. (௭௩)

இத்தலமே தலமாக விடம்பெறுதி யென்றோடிர்
கொத்தெழுமோர் மரகதத்தி னொளிவீசு முமையாள்பேர்
நத்துபுகழ மரகதந்தா ளவள்பேரா னகரமிதற்
கொத்தலமும் புகழம்பை யெனும்பெயரு மிசைத்தனமால். ()

வேறு.

நின்றன் பேர்கொளிந் நீத்தத்தின் மூழ்குவார்
கன்று சன்மக் கடுந்துயர் நீங்குவார்
நன்று மக்களுஞ் செல்வமு நண்ணுவார்
சென்று நற்கதி சேர்குவர் திண்ணமே.

நீபுகழ்ந்த புகழ்ச்சி நிகழ்த்தினோர்
பாபமெய்திலர் பண்ணவ ராகுவர்
தாபமாம்பிற வித்துயர் சார்ந்திலார்
சோலையாங் கயிலைப்பதி துன்னுவார். (௭௬)

பந்தமற்றெனையே பரமாக நீ
யந்தரங்கத் திருத்தினை யாதலா
லெந்தமாதவர் தம்மினு மென்றனோர்
சொந்தமாதவத் துயவ னீயரோ. (௭௭)

சோதி நாயகன் றாய்முனிக் கின்னண
வோதி மாலய னும்பரோ டிம்பரா
ராதி யாரும வாவுற னல்கியே
வேதி மீது விளங்கிய வித்தகன். (எஅ)

மையில் வானவர் மாமலர் தூறிடப்
பையின் மாலயன் போற்றிடப் பாதலம்
வையம யாவுந் துதித்திட மாமணிச்
செய்ய லிங்கத் திருவுரு வாயினான். (எகூ)

அன்ன லவ்வுரு வாதலு மம்பிகை
வண்ண நண்ணு மரகத மாமணிப்
பெண்ணி னாயகி யாயிடம் பெற்றனன்
மண்ணும விண்ணும் வளர்ந்து தழையவே. (அய)

வேறு.

இருக்கோது சிவபெருமான் சிவலிங்க வடிவாக வெல்லா மீ
ன்ற—மருக்கோதை மலைமகளோர் மரகதப்பெண் வடிவாக வய
ங்கா நின்ற—திருக்கோலந் தனையமரர் முனிவரெல்லாங் கண்
ணாரச் சேவித் தின்புற—பெருக்கோலக் கடல்குடைந்தா ரென்
பதலால் வேறென்னை பேசுமாறே. (அக)

மணிலிங்கப் பெருமானை மரகதப்பெண் ணாயகியை மகிழ்ந்
து போற்றிப்—பணிகின்ற நெடுமாலு நான்முகனுந் தேவர்களு
ம் பகன் மாணிக்க—மணிகின்ற சூட்டுரக வேந்தர்களு முனிவர்
களு மாரு ருள்ளங்—கனிகொண்ட தபோதனனுங் காசிபனைச்
சூழ்ந்தனர்கள் களிப்புற் றாராய். (அஉ)

தூய்செய்த வொருநான்கு மறையாலு மறிவரிய சோதியா
ய—பேய்செய்த வரங்காடு பெம்மானை யுன்னாலே பெரிது போ
ற்றி—நோய்செய்த பவங்கடிந்தோஞ் சிவகதிமேற் களிக்கின்
றோ மவல்ல தென்னே—ஈசெய்த மகம்போலிங் கார்செய்தா
ரார் செய்தார் நிலத்திலம்மா. (அங)

விண்காணும் வேதண்ட மலைவிளங்கு வித்தகனை விமலன்
றன்னைப்—பண்காணும் வேதமெலா மறியாத பண்ணவனைப் ப
ரமன் றன்னை—பெண்காணு மிடத்தானைப் பிறையேறு சடையா
னைப் பெரிதெல்லோருங்—கண்காணு முறைசெய்தா யுனைப்
போல வெமக்குரிமை கண்டார் யாரே. (அச)

சூழ்ந்திருக்கு மெமைப்போன்றூர்க் கரிதான வுயிரான து ணைவ னீயே—யாழ்ந்திருக்கு மெங்கண்மனத் தனுதினமுங் குடியிருக்கு மன்பனீயே—வாழ்ந்திருக்கும் பெருவாழ்வும் பெருநிதியும் பெருந்தவமு மற்றுநீயே—தாழ்ந்திருக்குஞ் சடைமுடித்த தபோதனர்க ளியாவருக்குந் தலைவனீயே. (௮௫)

இன்னபல புகழ்ந்திடலுங் காசிபனுங் கெழுந்தருளி யென்னை யென்னே—யன்னசெய லெல்லாந மற்புதனார் செயலாவதன்றிநொந்த—சின்னவொரு அரும்பினிலுந அரும்பாவேன் செயலாமோ செப்பலாமோ—வென்னபல பலபுகனறுன மூவருட னுல்லவொன விசைக்கும் பேரான். (௮௬)

வேறு.

இவ்வகை நிகழும்வேலை யிருடியர் பெருமான் மீண்டு
செயவகை யோமஞ்செய்து செறியுளார்க கவிக ணல்கிச்
செய்வகை யாகமுறறித் தெக்கணைச் செம்பொ னொன்றிற்
கைவகை கூட்டிநல்கி யவவிருத தானஞ் செயதே. (௮௭)

அன்றுதொட் டதிதியோடங் காகம முரைத்தவாறு
மன்றலங் குழலினாளை வரதனை வணங்கிப் பூசை
நன்றுறப் புரிதலானுன் ஞாலமூன் றுலகமெலலா
மொன்றுறுஞ் சிவஞானத்தி னொருவாத வுறுவன் மாதோ. ()

வனத்துறை தவத்தி ரிந்த மாக்கதை படனஞ் செய்தார்
கனத்துகீள் சடிலத்தெங்கள் கண்ணுத லாவார் கேட்பார்
மனத்துற நினைத்தார் கைலை மன்னுவர் வழஙகு விததார்
தனத்துடன் றனையரோடு தாரணி புகழ வாழ்ந்தே (௮௯)

வெள்ளியங் கைலைசார்வார் வேறியா னுரைப்ப தென்னே
யுள்ளிய கருமமெல்லா மொருமுறை கேட்பார்க் கெய்துந்
தெள்ளுமிச் சரிதந்தன்னிற் றிருந்துமோர் வரிகற் றூரும்
வள்ளலாய் வானோராகி மழுவலான் கைலை சார்வார். (௯௰)

காசிபன் மகமுமெங்கள் கண்ணுத லுதித்த வாறும்
பேசினன் பேசினூர்க்குப் பேறருளிர்த லிங்கத்
தீசனு ரைித்தாட் கொள்ளு மிறைவரு மானுமொன்று
தேசினூர் சூதயோகி செப்பலு முனிவரெல்லாம். (௯௧)

நாதனு.ரெம்மையாளு நம்புனு ரைித்தாட் கொண்ட
வேதநேர் சரிதமென்னும் வியன்மழை யெதிர்நோக் குறற

சாதக மாஞேமென்னத் தாழ்தலு மொப்பிலாத
மேசகு ருதபோதன் விளமபுத லாயினுஞல். (கூஉ)

## காசிபேச்சுரச்சருக்கம் முற்றிற்று.

---

## பதினைந்தாவது

## காசிபேச்சுரச்சருக்க வசனச்சுருக்கம்.

முனிவர்களே! முன் அதிதிமாதவஞ்செய்யப்பொருனை நாய கிவரமளித்ததும் வெற்றிபெற்ற தேவர் காசிபருடன் அருநாய கியை வாது போற்றியதும் மற்றுமுள்ள கதைகளனைத்தையும் காசிபதீர்த்தச்சருக்கத்திற் சொல்லினேன், இனிமேல் மலையாச லகன்னிகையாகிய அப்பொருனைமாதேவி உத்திரவின்படி கா சிபமகாமுனிவன யாகஞ்செய்ததையும் சிவபிரான் ஆங்கெழுந்த ருளி வரமளித்ததையும் சொல்கின்றேன் கேளுங்கள்.

தாமரைமலரில் வாசஞ்செய்கிற பிரமாவின் காதலனுகிய காசிபன முன் ஒப்பற்ற ஓர் யாகஞ்செய்யக் கருதித்தமது சீ டரை விடுத்து உலகத்திலுள்ள முனிவர்களையும் தேவர்முதலா னவர்களையும் அழைத்தலும், பதஞ்சலி பரத்துவாசன, பராசர ன்,விசுவாமித்திரன் முதலான அளவற்ற முனிவர்களும துசித ா, விசுவேதேவர் சூரியர் அனிலர் சாத்தியர் முதலானவர்களும் எண்டிசைக்காவலர்களும் மற்றுள்ளயாவரும் யாகசாலைவந்து சேர்ந்தனர்.உடனே காசிபன் அவர்களையுபசரித்து அதிதியுடன பொருனைமூழ்கி நலமுகூர்த்தத்தில்யாகசாலையுட்புகுந்து விநா யகரைப்பூசித்துவேண்டி,ரித்துக்களாவோர் வேதம்வல்லபரிசுத் தமுனிவர்களாகநியமித்து அவிசு.கிரகமதாறு சொமராஜாபுரோ டாசம் இந்தனம்,தெய மண் மரம் பொன் இவைகளாற செய்ய ப்பட்ட கலங்கள் ஆகிய இவைமுதலியன சித்தஞ்செயது, வான வர் அவியுண்ண வரும் வழியமைத்ததுபோல் யூபஸதம்பம் நட் டு அதில் இலக்கணம் அமைந்தஅழிவில்லாத யாகப்பசுக்களைக் கட்டி ஓமஞ் செய்தனன். முனிவர்களே! அந்தஓமகுண்டத்திலிரு ந்து சொலிக்கும் அக்கினியின் சிறப்பைச்சிவபிரான் நெற்றிக்க கண்ணன்யேஞே? அப்பிரான்கைலேந்திய தீக்கொழுந்தன்பே லே? அக்குண்டத்திற் சிவபிரான் உதித்தலால் பிறபிறப்பற்

றகடவுளைப் பெற்றிட்டவோர் தாயென்பேனோ? யாதென்று சொல்லுவேன், காருகபததியம், தக்கனாக்கினி. ஆகவநீயம் என்ற மூன்றக்கினிகளிலும் ரித்துக்கள் வகுப்புறச்செய்யும் ஓமத்தினால் முச்சுடரும் விளங்க,அதிதியோடு காசிபமுனி இனிதிருந்த மகச்சாலையில் வேதாகம புராணமிருதிசங்கீதம் பாணிமுதலானவாததியங்கள் எங்குமுழங்கின.

பருவத்தில் அட்ட அவிசுகளின்மணமும் நெய்கலந்தவவை ஓமத்தால வருமவாசமும பிராமணபோஜனததிறகாக அட்ட பொறிககறிமணமும அவர்களுக்குசசூட்டுமலர்மணமும எஙகும்வியாபிததன. யாகமண்டபததிலுளள மாணிக்கமணிகளும் முததுமாலைகளும் தக்ஷணையினபொருட்டுக்குவிததிருக்கும் பொற குவைகளும் தோரணத்திறகட்டியப சநதிரகாந்தக்கறகளும் திரிலோகஙகளுமவிளக்கமுறச்செயதன. உலகததிலுள்ள மனனுயிா முழுதுமஒருவழிவந்து மொய்த்தபடியால அந்தயாகசாலை பிரளயாநதத்தில உயிரனைத்தும் வந்தொடுஙகும் சிவபிரானடாதஙகளை யொத்திருந்தது. அன்றியும் அம்மூன்று அக்கினிகளும சிவபிரான மூனறு திருவுருவெடுத்தது போலவும், அபபிரான் கபர்த்தமென்னும் சடாபாரத்தை மூன்று வகுபபாயபபிரிநது மேல நுனியாக்கிக்கட்டியதுபோலவும் அவர்கைலேந்திய முததலைச்சூலம் போலவும் விளங்கிற்று. இன்னும் அம்முனிவன் யாகசாலை, அங்குச்சூழந்திருக்கும்பிராமணசமுகஙகளேமுகங்களாகவும் ஓமாக்கினிகளே கண்களாகவும் தூண்களே புயங்களாகவும் தருப்பைகளே வேணியாகவும் ஓம தூமமே விபூதியாகவும் தோரணஙகளே ஆபரணஙகளாகவும் சிறப்புற்றுச் சிவபிரானை யொத்திருந்தது. இனனுமஅச்சாலை “ திசைமுகமறைக்கூற்றுல பிரமனையும்” திரு அகஞ்சிறத்தலால் விஷ்ணுவையும் இசைபெறததுதிக்கையால் கணபதியையும்,எதிரிசக்த்துஇயங்கையால்(சத்தி*அங்*கையால்)சுப்பிரமணியனையும் ஒத்தது. வேதங்களுக்கும் முக்காலங்களுக்கும் விஷ்ணு பிரமாதியர் உள்ளத்திற்கும் பஞ்ச பூதங்கட்கும் அப்பால் நின்றருளும் புனிதனே உலகரக்ஷகாரத்தமாக அங்கெழுந்தருள்வாளுனால் அம்மகச்சாலையின் சிறப்பை எவ்வாறுகூறுவது?

இவ்வாறு காசிபமகாமுனிவன் செய்துவரும் யாகக்கிரியையெல்லாஞ் சிவபெருமானுக்கேசெல்லக்கடவதாய்ச் சிந்தித்துத்

"ான் யாதொருபயனுமவிரும்பாமல கண்ணுதல் மூர்த்திக்கே ய
றபிதமெண அருளிகிறகையில் சிவனடியாராயாவரும் வணங்கிப்
பாறறச்சிவபிரான மரகதாம்பிகைசமேதராய அநதயாக உதத
ாக்கினியினின்றும் மேலெழுநது விளஙகலுற்றார்.

இவவாறு கடவுள் அடியாா உள்ளசசெநதாமரைமேல் விள
ஙகுவதுபோல யாகாகினிமேல விளஙகிய சிவபெருமானைப்ப
லவகைத்தேவா முனிவரோடு காசிபன தெரிசிதது ஆனநதககட
லில் மூழ்கலாயினன தேவாயாவரும்பரவசமுறறனா காசிபன
கடவுளின பாதாதிகேசம்வரை ஒவ்வொரு அங்கஙகளையும கண
களாரத் தெரிசிததுப பறபலவிதஙகளாகப் புகழநது மலாசொ
ரிந்து வணஙகிநின்றனன. உடனே யருள்மூாததி அம்முனிவனை
நோக்கிக்காசிபா, பிரமாதிதேவாகளுமுனனைப்போல எனக்கு உ
பசரித்திலர், விஷ்ணுவின் நயனாச்சனையிலும நீசெயத அாசச
னைகளபெரிது வேதஙகளும் உனனைப்போலெனனைக்கணடு புக
ழவிலலை. நீயெனனைமகததாலும மனத்தாலும அர்சசித்தமையா
லஇஙகுஎழுநதனம். வேணடுவதெனனை, எனறருளலும், முனிவ
ன், சுவாமி விஷ்ணு பிரமாதியரையும் மயக்குகினற மாயையிலே
நான் மயஙகாமல பிறதெய்வஙகளை வணங்காமல உன்னையேவண
ங்கிப்பத்திசெயயல் வேணடும, எனபேரால நீயுமஇநததீாத்தமு
ம் இந்தப்பதியும் விளஙகவேணடுமெனறனன.

கடவுள் முனிவனைத்தழுவியுபசரிதது அவவரங்களெலாம்
அருளிப்புகல்வதாயினர். காசிபா! உனக்கு ஞானோபதேசமுஞ
செயதோம். ஆகையால் நீஅடுத்தகல்பத்தில என் அமசமாய்க்
கபிலமுனியாய உலகததிலுதிதது நல்லோாயாவருககும் சாஙகி
யயோகததை உபதேசிககக்கடவை இன்றுமுதல்நீகேட்டுககொ
ண்டபடி நம் பெயா காசிபேச்சுரா இத்தீாத்தம் காசிபதீர்ததம்
இப்பதி காசிபேசபுரம எனவிளஙகக்கடவது நீசெயததவத்தா
லே உலகமெல்லாம உயயும்பொருட்டு அம்பிகையுடன நாம இவ
விடத்திலே விளஙகி வாழகின்றோம். ஆகையால நீஅதிதியுடன
இத்தீர்த்தத்தால் என்னை நீராட்டிஅருச்சித்துவரக்கடவை. அமபி
கையின் பேரால் இத்தலம் அம்பையெனவும்பெயாபெறும், இத
தீர்த்தத்தில் மூழ்கினோர் பிறவித்துயர் அணுகார், புத்திரபேறுமு
தலான சம்பத்துக்களும் அடைவார்கள் நீபுகழ்ந்த வாக்கியங்க
ளால் எம்மைப்புகழ்ந்தவர் சிவகதிபெறுவாாகள், நீயேநமக்கு

அந்தரங்கமாதவன என்றருளித் தேவர்யாவரும்புகழ்ந்து போற்ற ஓர்மணிலிங்க சொரூபமாய அவ்விடத்திலேயே விளங்கலாயினா. அம்பிகையும் ஓர்மரகதமணித்திருவுருப்பெற்றனள்.

இவ்வாறு திருவுருக்கொண்டெழுந்தருளியபெருமானையும் அம்பிகையையும் யாவரும் வணங்கிக்களித்தாக காசிபமகாமுனிவனைப்பற்பலவிதங்களாகப்புகழ்ந்தனர். உடனே காசிபன் யாகமெல்லாமுடித்துதக்ஷிணைநல்கி அவபிரதஸ்நானமுஞ்செய்து சுவாமி காசிபேச்சுரரையும அம்பிகையையும் பூசித்து வரலாயினன்.

முனிவர்களே! இக்கதையைப்படனஞ்செய்தவர்கள்சிவசாரூபமடைவார்கள் நினைத்தவரும்சிவபதிமுதலான சர்வாபீஷ்டமும் பெறுவார்கள் என்றுசூதமுனிகூற மற்றையமுனிவர்கள் அவரை மிகப்புகழ்ந்து எரித்தாட்கொண்டார்சரிதமும் கருணைசெய்தருளுதல்வேண்டுமெனச்சூதமுனிமேற்கூறலாயினா.

## காசிபேச்சுரச்சருக்கவசனச்சுருக்கம் முற்றிற்று.

---

### பதினாறவது.

## எரித்தாட்கொண்டசருக்கம்.

---

பொன்வந்த களம்பமெனும புரத்தில்வாழ்ந்த பூசுரனும் பிரமோதன பொறபூண் செலவம்—பின்வந்த வனுக்குளன பிரிததுகல்கான் பெரிதுபொருள் கவர்ந்தயலூர் பெயர்ந்துவாழ்ந்து—மின்வந்த மனைமக்கள் யமனூர்மேவ வேண்டுநிதி பெய்தவொருவேயததன் னேன்றித்—தென்வந்து குயினகரஞ் சேர்ந்துசைவத் திருத்துமறையவனேடு சிநேகஞ் செயதே. (க)

அவனிடமத் தண்டையடைக் கலத்தில் னல்கி யணிகொண்ட பொதிகைபடர்ந்தரிய கும்பத்—தவனிடுமெயச் சுடரோந்திப் பொருளைத் தாழ்ந்து சானவிசென் றெழுந்தாங்கு மீண்டுந் தாழ்ந்து—சிவனருளா னெல்லிவனப் பொருளைத் தீர்த்தஞ் சென்றெழுந்து சிவமறையோற் சேரநோக்கும—பவனமுயர் கதைகளெலாந் தீபதீர்த்தச் சருக்கமதி லுரைத்தனமேற பகரக் கேண்மின்.

வேறு.

கடியு மூபபொழிந் திளமைகூர் காளையம் பருவ
வடிவ வேதிய னட்டவன வரவெதிர் நோக்கி
யடிக ளாலயத் தோருழி யிருநதன னாக
பொடிகொண மேனியவ வருசசக னிலைமையும் புகல்வாம். (௩)

களம்ப வேதிய னடைக்கல மாகவுட் கனகம்
விளங்கு தண்டமன நீதனு மேயின னிலமபோ
யுளங்கொ ளோருழிவைததன னுள்ளன வறியான
வளங்கொண மக்கனன மனையுடன வாழ்ந்தனன் வருநாள் (௪)

வெயய தீவினை வலியினுற சைவவே தியறகு
வைய மெளனுறு நல்குர வடுத்ததால் வருந்திக்
கையி லுள்ளன கழுத்தினி லணிவன வான
செய்யபொன னெலாம் பசியெனுந தீயவற் களித்தான். (௫)

உண்ணற கெனறுமற்று டுப்பதற் கென்றுமற் றுள்ள
வண்ணக் கஞ்சத்தின் கலனெலா மாற்றின னயினருன்
மண்ணிற் செய்கலம வாங்கற்கும் வகையில னானு
னெண்ணற் காவதோ மிடிசெயுங கொடுமையி னியல்பே. (௬)

பெற்ற காதலங் குழவியு மனைவியும் பெரிது
சுறறு தீயினிற சூழ்தரு மிடியினுல் வேலைக்
குற்ற போனக மினமையா லுடலெலாம் வாடி
வறற லாயினா தானுமோர் துரும்பென வறண்டான. (௭)

சுற்ற லாமொரு முழமபடு துணிக்குமோர் கவளத
துற்ற தாகிய வுணவுக்கு மலநதன னெண்ணாக
கற்றை யஞசடைக் கண்ணுதற் பூசைகா ரணத்திற
பெற்ற நாடுரி யமுதொரு வேளையிற் பிரித்தே. (௮)

எட்டு மக்களுக் கவையுண வெயதுமா றளித்து
மட்டி ருநதபூங் குழலியுந் தானுநீர் மடுத்து
நெட்டு யிர்ப்புட னிரவெலா நித்திரை யின்றி
கொட்டு நீர்விழி மலங்கிடக் குலைகுலைந் தயாவான். (௯)

அயன் மனைச்சிறு குழவிக ளணிமணிக் கழுங்கி
மயல்கொண் மக்கடம வதனங்க ணோக்கிமாழ் குவனுஞ்
செயறுங் காலமு நோக்கியோர் செயவினை செயறகங
கயல தாயது விதியெனி லாக்கமாங் குறுமோ. (௰)

கள்ளனே யென நகரவர் கடிந்திவ னெவனெனா
றள்ளுநீரென வுறவினர் சார்ந்துநட் புறுவார்
கொள்ளி நோபல் மொழிந்திட வுலைக்களக் குகையில
வெள்ளி யாமென மனமெலா முருகிவிம் முவனால். (௰௧)

பித்த னென்றிடப் பேயெனப் பேதையே யென்னச
செத்தி லாவுயிர் சவமென விகழ்ந்திடத் திரிந்தா
னித்த ராதலத் தெக்குலத் தியாவரோ யெனினு
மத்த மில்லலோ லழிவதே யழகினு மழகே. (௰௨)

இன்ன கன்னலோா யுகமென விவன்கழித் திடுநாட்
பொன்ன கச்சிலை யவர்க்குறு பூசனை யாற்றி
யன்ன மாங்கருங் குழவிகட் களித்தக மேவிப்
பன்னி யோடக டாரநீ பருகின னிருந்தான. (௰௩)

அந்த வேலையோர் விருந்தின னந்தண னொருவன்
சொந்தமானவன் வருதலுந் தொழுதெதிர் நாடி
முந்த வாதன மளித்தன னமுதிடு முறைமைக்
கெந்த வாறெனக் கலக்கமுற் றிதயமாழ் கினனால். (௰௪)

முன்ன லாயினன் முன்னொரு மூப்பின னம்பாற்
றன்ன தாங்கரத் தடியடைக் கலத்தினிற் றந்தா
னன்ன தற்குளே தேனுமொன் றிருப்பதற் கமையு
மென்ன வெண்ணின னெடுத்தன னிரட்டுறப் பிளந்தான். (௰௫)

பிளந்த தும்பசும் பொன்னிறம் பிறங்குமா நிதியின்
வளத்தை நோக்கினன் மகிழ்வெனும் வாரிதி யாழ்ந்தான்
களத்தைக் காணெனக் காட்டினன் மற்றவள் கண்டா
ளுளத்தை யோ[illegible]ன வோதின னுள்ளன வெல்லாம். (௰௬)

சொல்லு நாயகன் மொழியெலாஞ் செவிசுடத் தோகை
யில்லடைப்பொருள் கவர்தலெவர்க்குமே தீமை
யல்ல தில்லையா னருசினுங் கொடியதீ தாமா
னல்ல தில்லையிக் காரிய நரகமே நல்கும். (௰௭)

காணக் கொல்லுமோர் விடமிது கருதவும் படுமோ
பேணிக் கேட்டிடிற் கொடுத்தவா பெரியநீர் தலைகீழ்
நாணிக் கோட்டிட லழகதோ வஃதினு நலிதன்
மாணச் சிரிய தல்லவோ வெனப்பல வருத்தாள். (௰௮)

வேய்பி றங்கிய தோளிசொல் விதமெலாங் கனியான்
சேய்பி றங்குபொற் காசெலாஞ் செலவிடத் துணிந்தான்
பாய்பி றங்கலை வைப்பெலாம் பணமெனிற பிணமும்
வாயபி றங்கிடப் பிளக்குமென் றுரைக்குமேன் மற்றென்.(௰௯)

பெருந்த னத்தொரு காசினு ளுப்பொருள் பெருக்கி
விருந்த மோமபினன் வெறுப்புற விழைவன வெல்லாந்
திருந்த லாயினன் மலையெனத் திருமனை குயின்றன்
பொருந்து மக்கட முடம்பெலாம் பொன்மணி நிறைத்தான். ()

கண்டு நேர் மொழிக் காதலி தனக்குங்கற் கனக
மண்டு பூண்பல வளித்தனன் வனிதியென் றுரைப்ப
வண்ட லம்புகை வாங்கின ளென்செய்வாள் வனைந்தாள்
கொண்ட வன்மொழி மறுத்திடல் கோதெனக் குறிப்பாள். ()

வேறு.

உண்ண லெலா மமுதானு னுடுப்பதெலாம் பொற்ற லைய வுடுக்கை யானு—னெண்ணலெல்லாம் பொருளானு னெழுத லெல்லாம் வாசிபெருக் கெழுத்தே யானு—னண்ண லெல்லாம் பெறலானு னல்வருக்கு நடுவிருக்கு நலமோ னுனன்—மண்ணலெலா மணியானன் மதிபபதெலாம் பொருளுடையார் மாட்டே யானன். (உஉ)

கரமிருந்து மிலனுனன் கண்ணிருந்துங் குருடானன் கடந்து செல்லுங்—சரணிருந்து முடமானன காதிருந்துஞ் செவிடானன் றடக்கை யேந்து—மிரவலருக் கீவதற்கு மின்னருளி னேக்குதற்கு மெழுந்து சென்று—பரவுதற்கு மவர்மொழியும் பழங்கண்மொழி யிற்சிறிது பறறற்கும்மே. (உ௩)

நிலையான வுறவினரு நிறையான நட்பினரு நெறிநின் றேரு மலையாத பெரும்புகழு மாகமபு ராணமுத லறிவுமெய்ம்மை குலையாத பெருந்தவமுங் குணமுந மெஞ்ஞான குருவுமியார்க்குந் தலையான பரசிவமும் பெறுவீடும் பொருளெனவே தருக்குற் றூனல்.(உ௪)

பாரிடத்தார் பரம்பரையோர் தொழில் விடுத்தா னெனவி கழ்ந்து பழிப்பா ரெனறே—சீரிடததோ ரணங்கெடுத்தார் தம க்குரிய பூசைமுறை செய்வ தானு—னீரிடத்தோ ரற்பருக்குச் செல்வமுறின் முன்னிலைமை நினைத்தல் செய்யா—ராரிடத்து ம் வணக்கமுறு ரவர்க்கதுவே யமனன்றி யறைநதற் குண்டோ. ()

அளவேறு பெரும்பொருளிற் சிறிதாலே யணிகலனு மகமு மற்றும்—விளைநிலனும் பலகொண்டான் மற்றதெலாம் புதைத்து வைத்தான் மேலுமாவல்—கிளைதராலாற் குயிலேச ராலயத்தும் பொருள்பலவுங் கிரகித் திட்டான்—கொளக் குளிர்ந்து பிறகு கொது நஞ்சமெனச் சிறிதேனுங் குறிததிலாதான. (உசு)

அகமேவு மன்பின்றித் தினப்பூசைக் கடனாறலைப்பச் சுடு நீராடி—நகைமேவு பொறகலனும் பொற்றூசும் வெண்ணீறு நல த்து வேய்ந்து—முகமாக வருவானைப் பலர்விலக்கச் சிவத்துவி சன் முடுகிசென்று—பகல்வேட தாரியைப்போற குயிலேச ராலயத்திற படர்ந்தா னன்றே. (உஎ)

சன்னிதியில் வருகின்ற வருச்சகனைப் பிரமோதன் சார்ந்து கண்டுஞ்—சொன்னமணிப் பணியாலுந தூசாலு மிகப பொலிந் ததோற் றததாலு—மின்னவனென் றறியாது மயககமுறறு னு ழையுள ராலினிது தேர்ந்தான்—முன்னிலையி னிலையானுன முக நோர்ந்தான் சரசமொழி மொழிவதானுன். (உஅ)

வேறு.

ஆருயிர்க் குயிரோயான வன்பனே நீயுமற்றைச்
சீருறு மனையா டாமுஞ் சிறுவருஞ் சுகமோ விந்தப்
பாருளோர் புகழ்ந்து போற்றும் பண்பெலா மளிப்பதான
வேருறு செல்வமல்லா மெய்தல்கேட் டகமகிழ்ந்தேன. ()

கடந்திடும் பொழுது நோயா னலிதரும் பொழுதுங் கானா(ந்து
படர்ந்திடும் பொழுதுந்தெண்ணீர் படிந்திடும பொழுதுஞ்சோர்
கிடந்திடும் பொழுது மொன்று கேட்டிடும் பொழுதுமாறு
கடந்திடும் பொழுதுமன்பா கருத்தைவிட் டகன்றிலாயே. (௩௰)

எந்நெறியான் சென்றாலு மென்னகத் திருத்தி யாலே
யென்னைவிட் டொருகாலத்து மிணைபிரிந திலைநீ யையா
நின்னகத தெந்தநாளு நிலைத்துளே னுதலாலே
நின்னையான் பிரிவதான நெறியெறகு மில்லை யாமால். (௩க)

ஒன்றுயி ரிவர்க்கங் கென்னே வுடலிரண் டென்னத் தேறுன்
மன்றலங் கமலத்தோன் முன் வகுத்தனன் வளர்வ தாஞே
மன்றிமற் றுண்டோ வையா வலைகட லுலகி னம்போ
னன்றுறத் தொடர்வு கொண்டார் நவிலிதற் குள்ளா ரோயோ.()

நின்னொரு விடைகொண் டார நீள்வரை முனிவன் றந்த
மின்னிய சுடராற கங்கை மேயின னங்கு மூழ்கி
யிந்நகர்ப் பொருளை வநதே னொதினா லூபபி கநதேன்
றன்னிகா காளையான பருவமுந் தழைக்கப பெறறேன. (கூகூ)

உன்னுவ லீர்ப்ப வந்தே னில்லடை யாகவுன் பான
முன்னு ஞானலித்த வெனறன் முழுதுயிாப பொருளே யாகி
மன்னுங்கின திலங்குதண்டம வழங்குதி யென்று னின்ன
சொனனனை யாதிசைவ னுக்கினன சொலல லானன. (கூச)

அந்தணு வெந்தலூருன் னபிதானம் யாதே திஙகண
வநதவா வுனனோடநநாள் வாஞ்சையிற றொடாபு கொணடா
னெநதலூ ரெவனே யிவலூரொநதலூா யானு ரெலலாம
புநதியிற றெளிந்து தானோ புகனறனே புகலிலாதாய. (கூரு)

சகததையும் புரட்டவலலாய் சாாநதனே யெனறே நினற
ன்—முகத்தையான் கண்டேன முனனே முறைமுறை நடபுற
ரன போன—மிகப்பசப புறுததுகினறுய விழித்துககொணடிரு
க்கும போதம்—பகததையும பரிபபாயபோலுமம பாாததிடி னி
னைபபோ லினறுல (கூசு)

மததமோ கனவுகண்ட மயக்கமோ வறிவை மூடும
பித்தமோ பிறபபிறகொண்ட பேதமைக குணமோ வலல
வெத்தனோ வெவருமாழக விநதிர சாலங காட்டுந
சித்தனோ விவருண் யார்நீ செபபுதி விரைவி னமமா. (கூஎ)

இல்லடை தடிதந்தாணு மெனனுட னடபுறறுனு
மலலல மலையயோகி வரத்தினுற காசிமேவி
நலலிந நகருறறுனு நனாதினா லூபபிறறுனு ஈ
சொல்லனு நன்றுநனறு சூழச்சியு நனறு நனறுல. (கூஅ)

தொடர்புள னெனறு யின்னுஞ் சோதர னெனறு மல்கு
மிடனுற யானுநீயென றியம்புவை போலுந தெணணீா
படர்தரு முலகிலயாாக்கும் பசிககளல கனறறு மேலவு
விடர்கெட விஃதோ சொலவா ரினனமுஞ சொல்வா ரனறே ()

நின்னைத்தான் மயங்கேனென்று நோநதிடேன் பேரி போதி
வெனனைத்தான மயக்கமுறறு ரொத்தனை சோடி யேயோ
கொனனைத்தா னூசிகொணடு கொலலாதம் மறுகு மாறல (ன்
புன்னததான் செலவா ரொததாய பலிகளுமேரி பலியா தெனறு

## ௧௮ம் எரித்தாட்கொண்டசருக்கம்.

கொடியனா மாதிசைவன் கூறிய மாற்றங் கேளா
வடிவயிற் றெரிவுதோன்ற வம்பக மருவி சோர
மடிதரு கலையும் பாம்பாய் மறறதுகடிக்கு மென்று
முடிவறி யாதுகெட்டே னெனமன முன்னி னொந்து. (௪௧)

களம்பனா மவனைநோக்கிக் கருவிழி யனையா யென்பேர்
விளம்புபி ரமோதநன்றே மேலைநா ணீயு நானும்
வளம்பெறிக் கோயில்வைத்தே வாஞ்சையி னட்டோ மன்றே
வுளம்பெறு மறநிரீக்ஷி யோசனை யுறுததல் வேணடுமே. (௪௨)

என்னைநீ நயந்துமேனா னில்லிடை யழைத்துச் செல்லப்
பன்னியைப் புதல்வாதம்மைப் பார்த்தனன் களித்தே னன்றே
விந்நகரிருந்தார் யாரு மிங்கிவ ருடனு மஃதின்
மன்னிய வுயிருமென்ன வழங்கிட வாழ்ந்தோ மன்றே. (௪௩)

மற்றுமென் வரலாறெல்லாம் வகுத்தன னுயிரும் வாழ்வும்
பற்றுமித் தண்டமன்னப பகர்ந்தடைக் கலத்து நின்பா
லற்றைநா ளளிததே னன்றே வசலமுற் றினிதுமீளப்
பெற்றநா ளளித்தியென்னப பேசின னகன்றே னன்றே. (௪௪)

உரைவழிப் பொதியின்மேவி யுறுவராற் காசி சென்று
நரைவளர் திரையுமூப்பி னலிதலு மறவிங் குற்று
வரைநிகர் புயத்து வாவா வாயந்தனன் வந்தே னஃதாற்
புரையுள தென்னையயம் பொருந்துவ தெனனை யையா. (௪௫)

உருவத்தால் வணைதா லையமோங்கு மேலுரை யானுள்ளப்
பருவத்தா லொழுக்கத் தான்முன் பற்றிய குறியா லுண்மை
மருவத்தா னினையா தென்றே வந்துபோகின்ற செல்வக்
கருவத்தான் வெறுத்த லென்றே கருதிநீ யளித்தி யெனறான். ()

அந்தண னுரைத்த வெல்லாங் கேட்டன னாதிசைவன்
முந்தநம் முடனட்டானு மூங்கிலந் தடிதந் தானு
முந்துமூப் பெறித்து நல்ல வுவாவென முனைத்திட்டானும்
வந்திடு மிவனேயென்ன மனனுறத் தெளிந்தா னேனும். (௪௭)

வென்றியும் புகழு நல்கும் விரிதரு நிதியமெல்லா
மின்றியா மென்றுமுன்ன ரியம்பிய மொழிக ளெல்லாம்
பொன்றிடு மெனவுந் தேர்ந்தான் புகன்றதே புகலாநிற்பான்
கன்றிய மனத்தனாகிக் கடுத்தன னுரைசெய்வானும். (௪௮)

ஆரண மறையோ னீயா குகமமறையோன் பற்றுங்
காரண முளதோ நின்னைக் கண்டதேயில்லைச் சாவச்
சூரணம் புரிவே னின்னுஞ் சொல்லையே லுயிராவேண் டேற்றூற்
றேரண வாயிற் கப்பாற் றுலைதியென் றுரைத்தான் பாவி. (சகூ)

பாதகன் மாற்றங் கேளாப் பகீரெனா வயிற்றிற் செந்தீ
வேதனை வெதுப்பச் சோர்ந்த வேதியன் களம்பன் மீண்டுஞ்
சாதனை புரியேல்வைத்த சரணிதி கவரோற் சீத
ஞூதவ னுள்ளமட்டு மழிநா கழுந்திடாதே. (ரு0)

எனக்குநீ மறைத்தாயேனு மெங்கணு நிறைந்து நிற்பான
றனக்குநீ மறைக்கலாமோ சாதயிங் கிழந்து வாழ்வா
ரினக்குல முளதோ வெல்லா மழியுமென் றெண்ணிலாயோ
மனக்குள மனமே சான்று மறறது வேண்டுமேயோ. (ருக)

அங்கமு முயிரேபோல வரும்புழை நிறையச் செம்பொன
றஙகிய வூறறுக்கோலைத் தநதநா னிருப்ப வென்மு
னெங்குநீ தநதாயென்று யெனறபோ தடிவயிறறிற
பொஙகிய செநதீசும்மா போவதோ பொடிசெய யாதோ. ()

ஒழிதரும் பொருளவானி வொழுங்கிலா வொழுங்கின் வவ்வற
பழிதரு மழியாதான பாழ்படு மிசையு நாட்டு
மழுதழு தாற்றுகின்றே னன்பநீ யிரங்கிலாயோ
தொழுதனன் றருதியென்னச் சோர்ந்தவ னடிக்கீழ் வீழ்ந்தான்.

மாசறு குணத்தான் றண்மேல் வணங்கினன் கிடப்பச் சைவ
நீசனுங கணியான றனா னெரிபட வுதைபப தானுன
காசது வருவா யுண்டேற் கண்டகர் நடடா ரோனும
பாசனத தவரென்றூம் படுகொலை புரிவ ரன்றே. (ருச)

உதைத்தலுங் களம்ப னெஞ்சத் துறுதசெழு சினத்தெழுநது
பதைத்திடப் பதத்தா னெஞ்சிற் பதகனை யுதைத்தான மூண்ட
சுதத்திறு லிவர்கள் செய்த கைக்கல கத்தைக் கண்டா
ரிதத்துறை தொடுததுவேறு விலக்கின ரியம்பு வாரால். (ருரு)

வழக்கெது முளதேற் கையின் வல்லமை காட்ட லென்னே
வொழுக்கமா ரிவ்வூரெல்லா முணர்ந்தவ ரவைக்கண் சென்றின்
மழுக்காத் தமலர்கோயி லுயிற்பொரா லழகோ வென்ன
விழுக்கனை யிழுத்துமன்றி லேகினன் களம்பன் சொல்வான். ()

வேறு.

புராரிதா டொழுவீர் பக்கமுற றுறையீர் பொலிதரு கலை யெலாம் புகன்றீ—ரிராகமோ டைவையு மவித்துளீர் வருவா ரி யலபெலா முகதநிஞ லறிவீர—தராசெனு மொழியீர் தெயவதந் தழைக்குஞ் சபையுளீர் சார்ந்துயாங் கூறும்-பராவிய வழக்கினு ண்மையா தென்னப பகருக வென்னலும் பணிப்பார். (௬௭)

நற்பிர மோத வையனை நோக்கி நவிலுதி வரன்முறை யெ ன்னப், பொற்புறு களம்ப முதித்ததும் வேற்றூர் புக்கது ந தனித்ததும பொற்கா, சற்புறச் செறித்த வரைத்தடி கொண்டி வ் வமபையி லடுத்தது மடுத்து, நிறபவன ருெடர்வு நோவில் லடையி னிதிசெறி தண்டளித் ததுவும். (௬௮)

வாரமா மலையோய் மாமுனி யளித்த வளர் சுடர் விளக்கினூற் கங்கை, நீரமே லெழுந்து மீண்டவண் மூழ்கி நிருமலப் பொ ருளைநமே லெழுந்து, கோரமாஞ் சிறைமூப் பின்றியோ ரிளமை கொண்டதுங் கொடுத்தது கேட்ப, வாரடா வென்றங் கிகழுந துறைத் ததுவு மறைந்தனன் விரிதர வமலன். (௬௯)

அங்கவை கேட்ட வவையுளார் சைவ வந்தணன் றனையுரை யெனன, விங்கிவன றனனைக் கனவிடத் தெனிலு மெங்கணுங கணடதே யில்லை, யெங்குநின் றவனோ டொடர்புள னெனமு ன் னிலவைடைத் தண்டமீ யென்று, சஙகடம் புரிந்தான் கலகமு ஞ்செய்தான சார்ந்தன மிவ்வழி யென்றான். (௭௰)

என்றலு மவையோ ரியாவரோ யெனிலு மெனறெனுந் தண் டளித் துளரோ, நன்றுநீ மொழிதி யெனனலு முனனா நனை திரை மூப்பிறு னவிந்தோன், சென்றெனைத் தொடர்வுற் ருெ ருவெறு மூங்கிற, செல்லுறுந் தண்டளித் தினிய, தென்றலம் பொதியிற கனறனன் வநதாற் றிருத்தமுற் றளிப்பனென் று ரைத்தான், [௭௧)

உடுத்தவு முணவு மின்றிநீ யுழைந்த துலகெலா மறிதரு நி னக்கு, மடுத்திடு நிலனுஞ் செல்வமு மகமு மணிகளு மலிந்த தென செல்வர், தொடுத்திடு முயறசி சூழநததெ னெனனத் தொல்வினை யென்றனன் வினையுங், கொடுததிடு வழியா தென றன ரொன்றுங் கூறிலன் றலைகுனிந தனனால. (௭௨

பொன்னிறை தண்டே யதுகவர்ந் ததினுற் பொன்னனு யி னனிவ னென்ன, நன்னிலை தெளிந்த மன்றுளோ ரளித்த நரனி

வ ளுங்கொலோ வென்ன, முன்னிலை களம்பன் றனையறி கு றிகண் மொழியென வுள்ளன மொழிந்தான், பின்னும்பன் னெ றியி லவையுளா ரையமபெரிதறத் துடைத்தனர் மொழிவார்.

களம்பனே யாதி சைவனே யொன்று கழறுதுங் கேட்டி ராற் றெயவம், விளம்பிய படிவ ரகத்தினி ளுன்கு வேதத்தி ன் மேலவ ரவையில், வளம்பெற விளங்கு மென்பரா லியாங் கள் வழுத்தலே மந்திரமாக, வுளங்கொடங் கொழுகவுள் ளி ரோ வென்ன வொழுகுது மென்றன ருரைப்பார், (கூச)

மாசறு தவமு ளுற்றிய வழியான் மழுவலான் றனக்கு மா கமத்தின், பூசனை புரியு மகிமைகூர் சைவ பூசுர ருயினை பொய்மை, பேசுவ தெனைப்பொற் றண்டமே கவர்ந்தாய் பிர மோதனிங் கிவனலா தில்லை, யாசறு நரகி லழுந்துறே லின் னே யளிக்குதி யறைந்தன மென்றார். [கூ௫]

ஒழுக்கமா ரவையோ ருரைத்தன கேட்டங் குறுத்தெழுந் தருச்சகன் கவர்தல், வழக்கமோ வென்றன் வழிவழித் தொ ழிலோ வழுத்துமின் வலித்தெனை மதிகரும், புழுகக மோ வுரை ததீர் வேணடுமே வுண்மை புராந்தகன் சன்னிதி புகல்வா, மு ழுக்கவும் வெறுத் தண்டமே யெனன மொழிந்தன னவையு ளார் மொழிவார். (கூசு)

உணமைமம பெருமான் சன்னிதானததி லுரைப்பலென் று ரைதத்னை யெளிதோ, வெண்மையா ரீரு ரீறவோ பொருளா ன மெயயுயிா விடுதத்லென் வீ்மபோ, துணமையா நினகோ ருறுதியா யினன சாறறின மெனபபல புகன்று, ரெணமைய ம தியர துணமையே புகல்வ னென்றன னெறிமுழுக் குறுவான்.

கறையறு களம்பன் வினைவழி யாவுங் கதிக்குமென் றகத திடை கருதித், தறைபுக ழவையீ ருண்மையே சாறறத் தக்கரா ள் குறிக்கவென் றுரைபப, மறைபுகழ காசி பேசரா யாத்து மற்றைநாட் சோமவாரத்தி, லறைகவென் றுரைப்ப வாங்கதே நலமென் றகமகிழந தருச்சக னறைந்தான. (கூஅ)

மன்றுளார் யாருஞ்சென்றனர் முன்னர் வகுத்ததே வகு த்ததா வழக்கில், வென்றன மெனனுந் தருக்கிலாச சகனும் விதிமுறை செயததனி புகுநதான், கனறிய மனத்தக களமப

ணுமாலைக் கடன் செய வகன்றனன் கதிரோன், துன்றிய பதக
னழிவுரைக் கொழுநதீ சுட்டதாற் றெருகெடல குளித்தான். [ ]

வேறு.

நாளைப் பொய்ம்மை நவிலுகிற் பான்பட
மூளச் செந்தீ யிதாமென முன்னரோ
வாளக் காரணி வானக மாகிய
வாளக் காறகுறி யாற்றுதல் செக்கரோ. [எய]

நஞ்ச மன்ன நினைத்தில னட்டவ
னெஞ்சி லாநிதி யாவுங் கவர்ந்தவன்
வஞ்ச மன்ன வளர்த்தவ னர்ச்சக
னெஞ்ச மன்ன நிறைந்தது கங்குலே. (எக)

கள்ளன் போலில் லடைப்பொருள் கைத்தலை
கொள்ள லென்றுதன் கொண்கர்க் குரைத்தவள்
விள்ளும் வானவெண் மீனிகர் கற்பின
ளுள்ள மென்ன வுதித்தது திங்களே. (எஉ)

புல்லர் கைபபடு பொன்சில போழ்தினி
லிலலை யாவது போன்மதி யேகலு
மல்ல டர்நததங் காவது பாத்துணர்க்
கொல்லை யல்க லுடறறுதல போலுமே. (எங

அந்தி போயிரு ளாகிப் பினம்புலி
வந்து போயது மற்றவக் கோயில்வா
யிந்து சேகரர்க் கெய்திய பூசைசெய்
மநதன் சூழ்சசி வழுத்துகிற பாமரோ. [எச)

அநதி மாலையி லாலய மேவினோன்
முந்து பூசை முறையளை யாமமட்
டெந்தை யாருக் கியற்றினன் பின்னினைந்
திந்தவாறு மனத்தினி லெண்ணுவான். (எரு)

தூயயா ஞேடு தொடர்புள னன்றெனக்
கையிற கோல்வெறும் காம்பிகழ கோலெனப்
பொய்ய னென்னப் புகன்றனமென் செயவோ
மையயோ வவை யோரறி வாகவே. (எசு)

நெஞ் சறிந்திடு மெய்ம்மையை நேர்கெடும்
வஞ்ச னென்று மழுவல ஞலயத்

நெஞ்சி லாதுரை செய்குது மென்றனக்
அஞ்ச லாய துறை நெறி சேர்த்தனம். (௭௭)

ஐயன் மேற்கொண் டுறைந்திடிற் பொய்ம்மையாக்
அய்ய நீதிற றுலைவது திண்ணமாற்
செய்ய பொறகுச் சிறந்தவொ ராருயிர்
வெய்ய வாறு துலைப்பாது வீணன்றே. (௭௮)

ஆவிக் கேயழி வுற்றபி னும்பொருள்
பாவிக் கென்னை பயனுள தையையோ
காவிக் கேர்தரு கண்ணிநங் காதலி
கூவிக் கூறல்கொ ளாதுகெட் டேமரோ. (௭௯)

வீற்றின் மன்றில் விளம்பிய கூற்றெலா
மாறறிக் கூறல் வழக்கிலை கூறிடின்
வேற்று ளாரொடு வேணடினர் பற்பல
தூற்று கிற்பர் அடித்துயிர் வாடவே. (௮௰)

என்ன செய்குது மெனறயர்ந் தேங்கினு
னனும் யோசனை மேலுள மூன்றினன்
பொனணி ளோர்சடைப் புங்கவர் லிங்கமேன்
மன்னி ராவலை செயய மதித்தனன். (௮௧)

தந்து சுற்று நடக்கடத் தொன்றுநீர்
சந்து போதலர் தந்தன னையனை
மந்திரங்கள் வழாது புகன்றதில்
வந்திருப்ப வரன முறை செய்தனன். (௮௨)

வஞ்ச ரோனு மறைவழி யங்குறீஇக்
கஞ்ச நெஞ்சிற் கருதுவ ராயிடின
விஞைசை மந்திர விததக னூரவர்
நெஞசம் போல நிகழுவ னுதலால். (௮௩)

பம்ப ரத்தின் மூலைச்சியொா பாகமுந்
செம்பொற கோயிலும பீடமுந் தெண்மணித்
தம்ப லிங்கத தடமும் விட்டே யொரு
கும்ப மேருழ கனகுடி யாயினை. (௮௪

சந்த தந்தவ மேதலை யாயினார்
சிந்தனைக்கரி தாகுமொர் தேவையும்

வந்தொர் கும்பம் வயிற்பெற லாற்றுமேன்
மந்தி ரத்தின் வலியெது வாய்ந்ததே. (அரு)

மூவருக்கு முதறபெறு மூர்த்தியை
யாவ ரித்தக டததினை யாச்சகப்
பாவி கைக்கொடு பைம்பொல னுருமக்
கோவிலுக்கு வடாது கொழுத்தவோர், (அசு)

சிந்தத் தாரு வடித்தலை சேர்ந்தன
னந்திற்கும்ப மதைப் புதைத் தாலயத்
தெந்த வாயும பொறிதநன னேகினு
னந்தகாரத் தகம்பறை கொட்டவே. (அஎ)

கண்டிக் காவலர் கைக்கொள்வ ரோனைமத்
தண்டிக் காது விடாரெனத தங்கனே
ரெண்டிக் காதிக் களிததன னிலவயி
னுண்டிக் கள்வ னெனப் புகுந் தற்றனன். (அஅ)

பஞ்சின மேற்கிடை யாயினும் பாதகன்
றஞ்சி லானினிச் சொல்லிய வாறுபொ
யெஞ்சி லாதுமை கிற்பமென் றெணணினன்
கஞ்ச நாத னுதித்தல் கருதினன. (அகூ)

வேறு.

ஆதி சைவன் செய்தி யின்ன வாக வேத வேதியான்
சோதிசென் றடைந்த காலை தொல்வினைக் கடனமுடித்
தேதமுற்ற பாவி பொய் யிசைத்தவாறு மாநிதி
யாதுமிற்ற வாறு நெஞ்சிலெண்ணி யெணணி மாழகியே. (கூ௦)

உன்னை யின்றி யங்கொர் வீதி யுறையுன் முன்றில் வேதிகைக்
கண்ணுறங்க லாயினன்க ளுவினிற கரும்புநேர்
பண்ணிலங்கு மொழியிடதத பள்ளிவிட்டொ ரநதணன்
வண்ணமாகி யம்பை மேவு வரதர் வந்து தோன்றினர். (கூக)

தோன்று கின்ற வேதியன் றுளங்குநீறு மாகமு
மான்ற றுலொர் குண்டிகை யணிந்திலங்கு கைகளுந்
தேன்ற தும்பு வேத கீதஞ் செப்புநாவி னணிமையு
மூன்று பத்தி ரண்டின னகக முறையணிந்த மார்பமும். (கூஉ)

கண்டனன் களம்ப னக்க ணுவினிற் கனிந்தெதிர்
தெண்ட னிட்டு நின்று நின தெரிசனத்தி னுயினேன்
கொண்ட கொள்கையாவு மெனகை கொண்டன னெனப்புகழ்ந்
தண்டவாச னத்திருத்தி யலர்கவேகி வாழ்த்தினன. (௧௩)

வாழத்துவானை யீசனுன மறைபுகன்ற வேதிய
னூழத்தவெனனை யுனனிடத்தி லொனறுசொல்ல வுனனினம்
பாழத்தபாவி யுண்மையே பகர்வதா யுரைத்திருண்
மூழத்த போது காசிபேச மூாத்தியா முதல்வனை (௧௪)

அளிபடைத்த வொருகடத்தி லாவிந்தி லங்குபொற
றளியிடத்து வடபுறத்து தளிாபடைத்து நிறபதோர்
புளியிடத்தி னடியிடத்து புதைபுதைத்து வைத்தகங
களிபடைத்து சதனமூடு கடுகவாந்த டைந்தனன. (௧௫)

ஆகையானீ நாளையுணமை யாதிசைவ ஞெதுகால
சாகைமேவு சிநதகாத தழுவிநிறப வேணடுதி
மூகைபோலி ரோனினென்ன முற்றுமென்ற ளித்தருள்
வாகைமேவு நாதனு மறையவன மறைநதனன். (௧௬)

கரத்தலும் விழித்தனன்க ளம்ப னிங்கு கனடதெ
னுரத்த தோர்க ளுவதோமற றுள்ளதோர் நினைவதே
திரத்ததொன றுதேறவெனத் தியங்கினன றெளிநதனன
பரத்தினனறிலைகுநம்பா பான்மையென்ற வுணமையே. [௧௭]

எழுந்தனன் குவித்தனன்கை யெந்தைநாத வேதமும்
தொழுந்த கைத்தி லாததாளக ளெளுறச் சிவப்பாற
கொழுந்தனத் தழைத்தநங்கை கொங்கைவிம்மி யாகமட்
டழுந்தல் விட்டிங் கேகுமா றடிமையெனன செயததே. [௧௮]

வேறு.

யாரொருபா தகன்பிறந்த காரணத்தா லொருகடத்தி லிட முங் கொண்டாய, மாரொருபாற் றுறந்திறவு வாராத வழிக டந்தென் மனத்திற்புக்காயத, தேரொருநகு சொரிகொனறைத் திருமுடியா யடியேன்செய நிமை போல, பீரொதுங்கு கடல் புடைசூ ழுலகிடத்தி யாங்கெவரே மிகச்செய்தாரே. (௧௯)

வல்லான முலைச்சியுமை வருடுதலுஞ் சிவப்பேறு மலர்த் தாளுடையேன், கலலான மனத்தினிடை நடநதனையென் கன்றிய

வோ கறங்கேபோலச், செல்லாறு படைத்தபொரு ளிழந்தன
ன்மீட் டருடியெனச் செப்பினேனே, வல்லாறிங் குறவெளி
யேன செயதவினை யெவ்வினையோ வறிந்திலேனே. (௧௦௦)

எயதா நின்றிருவிளையாட் டெவரறிவா ரெனப்பலவு மியம்
பா நிற்பப், பொய்தானு மருச்சகன்ற னுளக்கவலை புலைக்கு
நிகர் போதா வென்னு, மைதாவு மிருட்படலங் கங்கைதெய்வ
நாயகனை வாழ்த்து கிறபார், வெயதான கலிநீங்கு விதம்போ
லக் கதிருதிப்ப விலகிற்றன்றே. (௧௦௧)

கனறியசெங் கதிருதிப்ப வருச்சகனுந் துயிலெழுந்து கடுக
ச்சென்று, மனறவனைச் சாதமொழி மொழிகுதுமியாம் வம்
மினென மறித்தானாக, நன்றறியு மாங்கவருங் களம்பனுடன்
மற்றுள்ள நகரததாரும், வென்றிமழுப படையுடையார் குயி
லேச ராலயத்தின் மேயினரால். (௧௦௨)

எண்மையிட மிலாதெவரு நெருங்குதல்கண் டருச்சகனு
மெழுந்து தெணணீர்த், தண்மைபெறு பொருனையிலே மூழ்கி
மணி யிலிங்கத்தைத் தழுவி நின்றங், குண்மையிலா வுண்மை
சொல வொருப்படுங்காற பிரமோத னுறைத்துக்கூவி, யண
மையருச் சகனையழைத் தினனவவை யோரறியவுறைகிறபானால்.

இப்பெருமான் றனைத்தழுவிச சாதமொழி நீயிசைத்தா லே
ற்றுக்கொள்ளேன. செப்பரிய பாதகத்தா னினனோடி யான
ரகரு சேறலவேணடு, மபபுனிமா மரந்தழுவி யறைதியென
வவையோர்முன னளித்தவாறே, செபபுவனென றருசசகனுங
குரைத்திடலு மனறவரித் திறஞசொலவாரால. (௧௦௪

வெற்றுழியிற புன்னுளதேற் கொடிபுகுதப் பயமாம்புண
வெற்பீதின்றே, லெற்நெறியிற புகுந்தாலென சாதமுள னுயி
டினி யிவ்விடத்தி, லிற்நெடிய மாநதழுவி யிசைத்திடலால் வ
ருமேத மென்னை யின்றே, லன்னவனறன் பொருளனைத்து மீ
தியென வறபுறுத்த லானார் மாதோ. (௧௦௫)

பொதுவிருந்த நெறியுணர்ந்தா ரொருவாறு புகன்றவெலா
ம் பொருந்தக் கேட்டு, மதிகலங்கிச் சூழ்ச்சியெலா மறிந்தன
ர்கொ லிவரெனன மயக்கமுற்றான், விதிநெறியின் வருவதுவே
வருமெனன மனத்துற்ற மெலிவு தீர்ந்தா, னதினெறியே பு
கலதுமெனறனருச்சகனுங் கதுகேட்ட வவையோர் சொல்வார்

சீர்த்திபெறு கடவுளரோர் சான்றாக வொன்றுசொல நீதே யாங்கு, பார்த்தவர்க்கும் பாவமுறும் நீசொல்ல வெறும்பொ யமைப் பாழாஞ் செல்வத், தார்ததியினு லழிநராகுக் காளா கேல் கேட்டியென வலார்க்கா ரெல்லாந், தூர்த்தன்மனத் துற நிலையா துண்மையதே சொல்வனெனத் துணிந்தானுகி. (௧௦௭)

கடுத்தெழுந்தான் திருதிரிணித் தாருவினை யிருகரத்தாற் க ட்டிக்கொண்டா, னெடுத்தபுர மூன்றினையும் பொடிசெய்த வா ளுனை யானைசொன்னேனை, கொடுத்தவனு மடுத்தவனு மிவனல் லன் கோளும் வெறுங் கோலேயானிங், கெடுத்தமொழி பொ ய்மையதே லெனைச்சுடுக தெய்வமென விசைத்தான் பாவி.

வேறு.

பொய்யான மெய்மையிவன் புகறலோடு புரமூன்றும் பொ டியாகப் புன்னகைத்த, மெய்யானற்ன கடுங்கோபம் விளங்கு நெற்றி விழிக்கனலே காறபுறமும் விளைந்துபற்றி, வெய்யானு மரத்துடனே வெந்து நீறு விடுமாறு சடசடென விம்பல் செ யது, மையாறு மண்டமுதல் வையமேவு மன்னுயிர்கணடுநடுங் க வளர்ந்த செந்தீ. (௧௦௯)

தீதானபாதகனும் புளியுஞ்சேரந் தீயந்து கறிந தொண்பொ டியாத் தீர்ந்தாரோனும், பாதாள முதலவானப் பரப்பு மட்டும் பரந்தெழுந்த சிறிதுகுறை பட்டதில்லை, வேதாரத தீகொ ழுந்தின மேலிடத்து வித்தகனூர் சென்னிமுதல் விளங்குந்தோ ளக, ளோராயிரத்தளவா போங்கா நின்ற வொரு விசுவ புரு டனென வுருக்கொண்டாரால் (௧௧௦)

தங்கடங்க ளுலகமெலாந் தழற்பிழம்பு தகிந்திடலாற் சற் றெவனுந் தரியாராகி, யங்கணவிசும் புடையாரு மலர்மேலா னு மரவணைமேற் றுயில்வானு மகிலத்தாரும், வெங்கணரிப ய னனகரும் வேதண்டத்து விளங்குநரும் யுகாந்தமிவண் மேய தென்னச், சங்கைபடைத் தகனழிந்தார் தரணிமீது சங்கரனார் செயல் தெரிந்தார் வந்து சார்ந்தார். (௧௧௧)

கதிரவர்க்குங் காணக்கண் கடிது கூசுங் கடவுளர்தந் திரு மேனி முழுதுங்காணு, ரதிதருசெந் தீப்பிழம்பா லணுகலசெ ய்யா ராங்காங்கு வெகுதூர மகன்று நின்றார், பிதிரொளிசேர் வாளினொடு பிறைவாயம்பு பிறுகமழு முத்தலைவேல் பிறவுந்தா

ங்கிக, கொதிகொதித்த கொடுங்கோபக் கொள்ளையாலே கோறல் குறி காட்டுகைகள் குலவக்கண்டார். (ககஉ)

நெற்றியினமேற் புருரமெலா நெறிதகல்கண்டார் நிறப்பொறிகள் விழிகளெலா நிரபபல்கண்டார்; முற்றெயிறு நெறுநெறென மூதண்டங்கண முகடிடிய முழங்குமொரு முழக்கங் கேட்டார், மறதிரண்ட புயப்படலம் வலத்திடதது வளிசுழலச் சுழற்றுகின்ற வலிமைகணடா, றெற்றுகுறி காட்டுபதத் தியல்பு கண்டாரினனுயிருந தாமிருக்கு மிடனுங்காணூர், (ககங

சிலகரஙகள் படைதொடுக்குந் தெரிந்து சுட்டுரு சிலவிழிகளனல் சொரியச் சினநது நோக்குஞ், சிலசிரங்கள் கீழ்நோக்குஞ் சேணுநோக்குஞ் சிலபுயங்க ளுலகதிரச் சேர்த்துத்தாக்குஞ், சிலபதங்க ளுடகத்தின சிறப்பு நல்குஞ் சிலவாயப்பல் விதழ் கடித்துச் செறுததல்காட்டுஞ், சிலபணிக ளாலாலஞ்சொரியச்சீறுஞ் சிலகருவி யிடிமுழக்கஞ் சிதைக்குமாதோ. (ககச

அண்டசரா சரங்களெலா மழிப்பான் வேண்டியகோரபயங்கரரூப மெடுத்தானை—னெணடிசைமே லெவண்புகுது மென்னுயாரு மேங்குறுகா லிரஙகாதி ரிருகை கூப்பித்—தெண்டனிடக்கருணை செயுந் தேவனென்று திருமகிழ்நன் செப்பிடலுஞ்செயதுநினைருர்—மண்டலங்கள புகழபுருடோத் தமனு மாயோன் மலாக்கரங்கள் குவித்தினை வழங்கலானுன். (ககரு)

போராரும் வலிபடைத்த புரத்தினூர்க்கும் புதுமலரின் கணைசொரிநத பொருவிலாக்கும்—பாராரு நரவரிக்கும் பரும்பனறிக்குமட பாரதளுக்கு மூனறுமதம் படுங்கரிக்கும—வாராத பெருஙகோபம வந்த தெனனே மறறுள்ளோந தீமையெதும் வளர்ததிடடோமோ—காராரு மிடறறரசே கடுததனீஙகிக் கருணை கொடு கடையோமைக காவாய நீயே. (ககசு)

சுற்றுகடல் கொதித்தாலச் சூடுநீப்பச் சுத்தமுறு தண்ணீரொங் குளதே கூறு—பெறறவளாங் கதைமுனிந்தாற பிறகுகாக்கும் பெறறியின ராரோயோ பெரியாய நீயே—முற்றிடவே முனிந்தாலம் முனிவு தீரபபார் மூதண்டத் துளரோயோ முதனீயனறி—மறறவரொங குளரோயோ வலியிழந்து மதிகலங்கு மெலியாரைக் காககமாதோ. (ககஎ)

ஆரணனே நீமுனியே லடியார்க்கன்ப னானவனே நீமுனி
யே லகிலபூத—காரணனே நீமுனியேல் கருணைபூத்த கற்பகமே
நீமுனியே லாலகால—பாரணனே நீமுனியேற் பகரும் வேத
பாரகனே நீமுனியேற் பரமானந்த—பூரணனே நீமுனியேற் பு
ன்னகைத்துப்—புரமெரித்தாய் நீமுனியேல் பொறுத்தாளவா
யே. (ககஅ)

வென்றிமழுப் படையுடையாய் நின்னருள்போற்றி வேதாந்
த வித்தகனே நின்னருள் போற்றி—மன்றினடம் புரிந்தருளும் வ
ரதாபோற்றி மறைநான்கு மறிவரிய வடிவாபோற்றி—குன்
றோலைச்சிலையாகக் குழைத்தாயபோற்றி குணங்குறிகற்பனை
கடந்த குழகா போற்றி—நன்றிதெனத் தீதிதென நயந்துதே
று நாயினார்க்கு மருள்சுரக்கு நாதாபோற்றி. (கக௯)

வேறு.

நீயே கதியென் றிவ்வாறு நெடுமால் புகழப் பிரமோதன்
வாயே குழறப் பலதுதிகள் வழங்கி வணங்க வானவருஞ்
சேயோ மணிப்பன் னகராதி திரிலோகத்தா ரெல்லாருந்
தாயே நீயே கதியென்னத் தாழ்ந்து வணங்கச் சிவபெருமான்,)

உள்ளக்களிவான் மகிழ்வெய்தி யுருத்தனித்தாங் குமையொருபாற்
கொள்ளப் பரம சாந்தநிலை கொழிக்குமைந்து முகங்காட்டி
மள்ளல் விடைமே லெழுந்தருளி மந்தகாசந் ததும்பநிறை
வெள்ளக்கடல்போன் மேனியனை விளித்தாங் கருளல் புரிவானால்

மாயா கேட்டி யொருபாவி வஞ்சத்துண்மை வழுத்தியதாற்
றீயாலெரியப் புரிந்தோர்நீ செய்த புகழான் மிகமகிழ்ந்தோ
நீயார் தரத்தின் வேண்டுவன நிகழ்த்தி யென்னு நெடுமாயன்
சேயார் மலர்த்தா மரைப்பதங்கள் சிரமே லணிந்தங் கிவைவே
ண்டும். (கஉஉ)

நினக்கே யடிமை யானாகி நின்முன் னுறை நிலைநின்று
வனக்கோ கனக மலர்ப்பதங்கள் வணங்கல் வேண்டு மஃதன்றி
கனக்கோ கனக னிமையோரு மியானுங் கலந்து போற்றியதா
லுனக்கோர் பெயர்போற் றீசுரரா யுலகோர் புகழப்பெறவே
ண்டும். (கஉ௩)

அருள்வாயென்று மவையனைத்து மளித்தோமென்றங் கருணைமூர்
த்தி—தெருள்வாய் களம்பன் றனைவேதச் செல்வா நின்னாற்

பொயபுகன்ற—மருள்வாயப் பாவி தனையெரித்தோ மற்றச் செல்வ மவனகத்தோ-ரிருள்வா யறைக்கி ழிருப்பதுகண் டெடு த்தாளுதியா லிஃதன்றி. (கஉச)

அன்பேர் தருமோர் குலமகளை யணிமா மணங்கொண் டம் பையிலே—யினபேர் தரநீ வாழ்ந்திடுகநின்ருலெரித்தாட் கொ ணடவரென—றெனபேருலக மேத்திடுக விசைததோ நினக்கு வேணடுவன—முன்பே மொழிதி யருடுமென மொழிந்தான் க ளம்பன முடிவணங்கி- (கஉரு)

அடியேற்களித்த வரமனைத்து மடைந்தேனெனினு மென னுலே—பொடியாககிடந்தா னெழல்வேண்டும பொருந்தப் பு விமேல் வாழ்ந்தெளியேன்—முடிவாங்காலை நின்பதத்தின் முய நகலவேணடு மளிததியெனக்—கடியார் கடுக்கைப் பெருமானக் காதலனைதது மளிததருளி. (கஉசு)

விதிமால் புகழ விண்ணவர்கள் விரிமாமலரின் மழைபொ ழியச—சுதிமா தவாகள புகழநதேததத தூயோன மேறகுமுக நோககித-துதிமாலிங்கத் தொளிர்வடிவாயத் தோற்றஞ்செயதா னெதிர்முகமே—கதியாபபுருடோத தமனெனற கருமாணிக்க ன கதித்தனனுல். (கஉஎ)

திருமாதவமே யாகிநின்றீர் தேவர்புகழு மெரித்தாட்கொ ள்—பெருமான்றனைச்சே விப்பதுவே பேருய் புருடோத் தம னென்ற—கருமாலெதிர்கொண் டேத்து நிலை கணடாா பிறவித துயா காணு—ரொருமாண் கரத்தான றனைததொழுவாாக் கொ னறும் பெருமை யளப்பதுவேர். (கஉஅ)

நனறே புரியு நைமிசததீா நாதரொரித்தாட் கொண்டருளு மன்றே யமரர் புடைசூழ வணுகும் புருடோத் தமப்பெருமா ணினறே புகழந்த விடமேல்பா னேராமிடமாலயததாகுஞ் செனறே பணியப் பெற்ருரோ தீராப்பிறவி யற்ருரோ. (கஉகூ)

ஈதிப்படியா நிசழ்நராலு மிமையோர் மறையோர் முதற்ப லரு—நீதிப்பிரமோ தனைபபுகழந்து நீடார் வரங்கள் கொடுதத கனரூா—பூதிப்பொடியாக் கிடந்தவனும பொருக்கென் றெழுந் தான பொயசொலலிச்—சாதித்ததுவு மொருகடவு டண்டிதத தையு மனறுன்ரு. (கஙo)

மானமொருபா லுயிர்வருந்த மறையோன் களம்ப னடி வீழ்ந்து, ஞானமுடையாய பொருணசையா நறையுண்செரு ககா லலந்தெறியா, தீனமதியாற புகன்றிட்ட வெல்லாம் பொறுத்தி யெனத்தொழுது, தானமுடைய வவையோர்க்குந் தண்டங்கோடி சமாப்பித்தான். (௧௯௧)

பின்னாகக்கடம்பன் றனையழைத்துப் பேராவலினுலகத்தெ டிப, பொன்னும் மணியும் போதிபொரும் புதுமா மனையும் வி ளைநிலனும், தின்னசனித்தே னெனப்புகல் நிலனு மனையு மல்லாத, மின்னு நிதியங் கைக்கொண்டான் மேலாம் புகழால வீயாதான், (௧௯௨)

பெற்ற நிதியிற் பாதி சிவ பெருமான் றனக்குப் பெரித ளித்து, மற்ற நிதியான் மணமுடித்தில் லறத்தில் வாழ்ந்தா னயி டினுங், கற்றைச்சடிலப் பெருமானைக் காலந்தோறுந் தெரிசிப் பற, குற்றவிரதங் கைக்கொண்டங் கொருவா தொழுகலாயி னனால். (௧௯௩)

வேறு.

கடிதான பிணிநீங்குங் கவலை நீங்கும் கனத்தனமு மகப்பே றுங் கிடைப்பாகல்குங், முடிதாங்கு மன்னவரின் முதலவராக்கு முனிவிணையுந் தவிழக்குமான முத்தி சேர்க்கும், பொடியாரு மெரித்தாட்கொள் புனிதற்கான புராணமிது பொறித்தாலும பூசித்தாலும், படிமீது படித்தாலும் படிப்பித்தாலும் பத்தி யொடு கேட்டாலும் பரவிமாதோ. (௧௯௪)

எரித்தாட்கொண்ட சருக்கம் முற்றிற்று.

---

## பதினாறாவது
## எரித்தாட்கொண்ட சருக்க வசனச்சுருக்கம்

முனிவர்களே! முன்சொல்லிய களம்பமெனனும் ஊரில் வாழ்ந்த பிரமோதன் என்ற ஓர் அந்தணன் தன் அனுசனை வஞ்சித்துக்கொண்ட நிதியுடன் வேற்றூரிற் சென்று வாழ்ந்ததும், அவ்வாறு வாழுங்காலத்தில் மனைவிமக்கள் யாவரும் இறந்துபோகத், தான் தனித்ததும், ஓர்முதுகிற்றண்டத்தில் வேண்டும் திரவியங்களைச் செறித்து மறைய நிதிகளைத் தம்பிக்களித்துக் கடைசியாய் இந்த அம்பைமா நகரத்தில் வந்து ஓர் ஆதிசைவனுடன் ந

ட்புற்றதும், பின்னர் அந்த ஆதிசைவனிடத்தில அத்தண்டத்தை அடைக்கலமாக நலகிய பொதியமலையிற் சென்று அகத்தியமுனிவரைக்கண்டு தெண்டனிட்டு அம்முனி புஙகவரால கொடுக்கப்பட்ட ஓதீபத்தினால் பொருனையில மூழகி கஙகையின மேலெழுந்து மீணடும அவவிடத்தில மூழகிப பொருனையி லெழுந்து நடபுறற சிவதத்துவிசன வரவு நோக்கி சுவாமி காசிபேசசுரர ஆலயத்தில் வந்திருந்ததும ஆகிய கதைகளனைத்தையுந தீபதீர்த்தச்சருக்கத்திற சொலலினேன, இனி, மேலுமநடநத கதைகளனைத்தையுஞ சொலலுகினறேன் கேளுஙகள.

தீரததமகிமையால நரைதிரை மூபபறறு யௌவன புருஷனான அந்தப் பிரமோதனெனற வேதியன நட்பாளனாகிய ஆதிசைவன வரவு நோக்கிச சுவாமி கோகிலேசுரர் ஆலயத்திலிருப்பதானான. இஙகு இவ்வாறிருபப அந்த ஆதிசைவன் நிலைமையையுமினிச சொலலுகினறேன கேளுஙகள.

அருச்சகன் முன பிரமோதனிடத்தில் அடைக்கலமாகப பொற்காசு நிறைந்த தணடத்தைக் கைபபறறித தன் வீட்டிற சென்று பத்திரமாக ஓரிடத்தில வைத்து வாழந்து வருகையில முன்செயத தீவினையால் உலகம் பழிக்குந தரித்திரமானது அவவாதிசைவனைச் சூழந்து வருத்தததொடஙகிறறு. அதனால் அவன் கையிலும கழுத்திலுமுள்ள செம்பொன்னெலலாம் பசியென்னு மொருபாதகனுக்கு அறபிதஞ்செயதனன. உடுக்கவும உண்ணவும் கதியிலலாதவனாயபினனும் வீட்டிலுள்ள வெணகல பாத்திரஙகளனைத்தையும் கிரயஞசெயதனன. மேன மேலும தரித்திரம் அதிகரித்ததால மடகலனகளவாஙகவும் வகையறற வனானான. முனிவர்களே! தரித்திரஞசெயயும கொடுமையை யாரால விடமுடியும இவவாறு காட்டுத்தீ வளைந்து கொணடது போல் தனனைச சூழந்துகொணட தரித்திரம செயயுஙகொடுமையால் மனைவி மககள் யாவரும வேளைககேறற போசனமிலலாமல வாடி வறறலாக அவவாதிசைவனும ஓர் துரும்புபோல் வறளலாயினன. ஒருமுழக்கந்தலுக்கும் ஒருகவளச்சோறறுக்கும அலநதவனானான. சுவாமி காசிபேசருக்குச செயதுவரும பூசை காரணத்தாற கிடைத்த நாடுரியரிசி பாகஞ் செயத நைவேத்தியத்தை ஒரே வேளையில தனது எட்டு மக்களுக்கும் பாகஞசெயது கொடுத்துத்தானும் தன்மனைவியும் வயிருரத்தன்

ணீர் பருகி கெட்டுயிர்ப்போடு இரவெல்லாம் நித்திரையில்லாம றகண்ணீர சொரிய மயங்கிக்கிடந்து உயிர்குலைவானன. இன்னும வ்வாதிசைவன அயலவீட்டுச சிறு குழநதைகள் அணிந்துகொ ண்டிருக்கும் அணிகளைக்கண்டு தங்களுக்கும் வேணடுமென அழுதுகொணடு கேட்கும் தனது சிறுவர முகங்களைப் பாரததுப் பாரதது வருநதுவானாயினன. முனிவர்களே! விதி வேறு பாடாயிருநதால செயலும காலமும் நோக்கி ஓர் தொழில செயதுமுடிக்க யாவருமு முடியாதன்றே? நனமையுமுறுதனறே? எனைசெயவான் அவவாதிசைவன மகா தரிததிராகிவிடடனன. ஆதலால அநநகரததார யாவரும கள்ளனெனவும, சுறறததார யாவரும கோபிதது இவன யார எளனுஙகளெனவும், சிநேகிதரயாவரும தீகொள்ளிககுச் சமானமான வசைமொழிகள கூறவும பொருளுகி உலைக்களத்திலுளள வெள்ளிபோல மனநிலையுருகி வெதுமபலுறறனன. மறறும இவவுலகததார பித்தன பேயன பேதை ஜீவபபிரேதமஎனப் பறபலவாக விகழநதுபேசவும தரியாதவனாயினன். முனிவர்களே! இவவுலகததிறபொருளிலலாதவர்களுக்குச சாவதைபபார்கிலும நனமை வேறொனறில்லையன்றே.

இவ்வாறு ஓர் நாழிகை யோர்யுகமாகக்கழித்து வரும அவ்வாதிசைவன ஓர்நாள கோயிற்பூசை நடததிக்கிடைதத நைவேத்தியத்தைத தன மக்கள் எணமருககும பாகஞ்செயது கொடுதது வீட்டில வந்து மனையாட்டியுடன தெண்ணீர்பருகி இருககினறவேளையில், உறவினராகிய வோர் அநதணன தனவீட்டில் வருதல்கண்டு உபசரித்து ஆதனத்திலிருக்கச்செய்து பூசிதது, இனி விருநது செயவிததற கெனசெயவோமெனறு மனததிற சஞசலங்கொளளுகையில முனனேறா அநதணன நமமிடததில அடைககலமாககொடுத்த ஊனறுகோலின ஏதாவது இருககக்கூடுமெனக்கருதி அத்தணடதனதயெடுததுபபிளநதனன. அவவாறுபிளநதவுடன அளவறற பொறகாசு குவிநது கிடததலைககணடுகளிபபுறறு தனமனையாட்டியை யழைத்துப பாரெனககாட்ட உடனே அககறபிறகரசி நாயகனைநோககி அளவறற இநநிதிக குவை கிடைத்தறகுககாரணம யாதெனக் கேட்டலும், அருசசகன உள்ளதெலலாம சொலலினன. அவையனைததுங கேட்ட அம்மாது கணவனைநோக்கி ஐயயோ அடைககலபபொருள கவாநதிடல் கொடியபாவம, நரகமேகொடுககும, இப்பொருள் கொளவ

தைப்பார்க்கிலும் சாவது மிகவும் நலம் கொடுத்தவர்வந்து கேட்டகாலத்தில் தலைகவிழ்ந்து நிற்பது அழகோ? அழகில்லை, ஆதலால் இந்நிதி நமக்கோர் விஷமபோன்றது இதை நினைக்கவுங்கூடாது, எனப்பற்பலவிதமான நீதிமொழி கூறுகின்றனள். அர்ச்சகன் மனைவியுரைத்த மொழியொன்றுங் கொள்ளாமல் பணமென்றாற் பிணமும் வாயைப்பிளக்குமென்ற பழமொழிப்படி அந்நிதியமனைத்தையும் செலவுசெய்யத்தொடங்கி ஓர் காசினால் வீட்டுக்கும் விருந்துக்கும் வேண்டும் உண்பொருள்களெல்லாங்குறைவற நிரப்பினன். சிலபொருளால் மேடைவீடு பணிவித்தனன். நினைத்ததெல்லாம் பெறலாயினன். தன்மக்கள்மேனியெல்லாம் பொன்னாபரணங்களால் நிறைத்தனன். மனையாட்டிக்குமப்பல நவரத்தினாபரணங்கள் அணிந்துகொள்ளும்படி கொடுக்க அம்மாதும் கணவன் மொழி மறுத்தல் தகாதெனக் கருதி தரித்துக்கொண்டனள்.

அப்பால் அர்ச்சகன் உண்பதெல்லாம் பாலாகவும், உடுப்பதெல்லாம் பொன்னிழைகோத்த வஸ்திரங்களாகவும், எண்ணுவதெல்லாம் பொருளாகவும், எழுதுவதெல்லாம் வாசிபெருக்குமெழுத்தாகவும் ஆயினன். இஷ்டம்போலெல்லாம் நிறைவேறப்பெற்றனன். சபைநடுவில்வீற்றிருக்கும் பெருமை பெற்றனன் அளவற்ற ஆபரணங்களால் விளங்குவானாயினன். பொருளுள்ளவனையே மதிக்குந் தன்மையுள்ளவனுமாயினன், அன்புமருளுமீகையுமற்றவனாய் சுற்றம் நட்பு கல்வி சத்தியம் ஞானம் தவம் குரு பரசிவம் மோக்ஷம் ஆகிய இவைகளெல்லாம் செல்வமென்றே மதிமயங்கித் தாமத குணத்தில் மூழ்குவானாயினன். உலகத்தார் பரம்பரையோர் தொழில்விட்டொழிந்தானென்று பழிப்பதற்கஞ்சி சுவாமி காசிபவரதர் பூசைமுறைமாத்திரம் விடாமல் மனத்தன்பின்றி யனுதினமும் நடத்திவருவானாயினன். பொருளாசை மேலும்மேலும் வளர்வதினால் அக்கோயிற் பொருள்களிலும் சிற்சில கவர்ந்து கொண்டனன். ஆதிசைவன் இவ்வாறு நிகழுகையிலோர்நாள் சுடுநீராடி விபூதியணிந்து பல ஆபரணங்கள்பூண்டு எதிர்முகமாய் வருபவர்களை ஏவலாளர் பலர்முன் சென்று விலக்கப்பகல்வேஷதாரியைப்போற் கௌரவத்துடன் சுவாமி காசிபேச்சுரர் ஆலயத்துட்சென்றனன்.

இவ்வாறு ஆதிசைவன் வருதலைப்பிரமோதன் பார்த்து இன்னானென்று இனந்தெரியாது மயங்கினவனாகி பிறர்பாற்கே.

ட்டிருந்து அவன் முன்வந்து நின்று அவ்வருச்சகனை நோக்கி உன்
மனைவி மக்கள் யாவரும் சுகமோ, நான் எவ்விடத்திற் சென்றாலு
ம் நீ என் அந்தரங்கத்தை விட்டு நீங்கவில்லை, அவ்வாறு நானு
ம் உன் உள்ளத்தைவிட்டு நீங்கிலேன் அன்றே, நம்மிருவருக்கும்
உயிர் ஒன்றாயிருக்கப் பிரமனுடலிரண்டாக வீணே படைத்தான்
ஆயினுமவ்வாறே வளர்வதானோம் இவ்வுலகத்தில் நம்மைப்போ
ல் நட்புறவாக ஒருவருமில்லையன்றே நான் உன்னிடத்தில்
விடைபெற்றுப்பொதிகையிற் சென்றுஅகத்தியமுனிவரைத்தெரி
சித்து அவர்கொடுத்த விளக்கால் அவ்விடத்துப் பொருநையில்
மூழ்கிக்கங்கையிலெழுந்து மீண்டும் அவ்விடத்தில் மூழ்கி நரை
திரை மூப்பின்றி யெளவன புருஷனாக இப்பொருநையிலெழுந்
தேன். அப்பொருநை நாயகி கொடுத்த வரம் பலபெற்றேனுட
னே உன்னைக்காணுமாவலினால் இவ்விடத்தில் வந்து உன்னைக்
கண்டு களிப்புற்றேன். நான் முன் உன்னிடத்தில் அடைக்கலமா
கக்கொடுத்த என்னுயிர்க்குயிராகிய அவ்வூன்றுகோலைத் தருவா
யாகவென்றனன் இவையனைத்துங் கேட்ட அருச்சகன் பிரமோ
தனை நோக்கி அந்தணா! உனக்கு மந்தணா உன்பெயரென்ன இ
ங்கு வந்த காரணமென்னை உன்னுடன் நட்புற்றார் யாவர் இந்த
ஊர் எந்தவூர், இவையெல்லாம் நன்றாய்த்தெளிந்தாலோ பற்பல
வார்த்தைகள் பேசாநின்றனை, இவ்வுலகத்தையுங் கட்டப்புரட்ட
வல்லமையுள்ளவனே! நான் உன்முகத்தையெக்காலத்திற் கண்டே
ன் விழித்துக்கொண்டிருக்கும்போழ்தே அவ்விழியையுங் கவா
ந்துகொள்வாய்போலும். உன்னைப்போல ஒருவரை இதுவரையா
ன் கண்டதில்லை, பசமோ கனவுகண்ட மயக்கமோ அல்லது பித்
தமோ, பிறப்பெண்கொண்ட ஆகிய [illegible]தாரோ, அல்லது யாரோ
ஐந்தொழிலுடையாரோ, அல்லது இந்திரசாலவித்தைக்காரரோ
சித்தபுருஷரோ நீயார், விரைவிற்சொல்வாயாக என்னுடன் சிநே
கங்கொண்டாரோ அடைக்கலமாக ஊன்றுகோல் கொடுத்தாரோ
ம் மலையமலைக்குச்சென்று அகத்தியர் கொடுத்த விளக்கினால் கா
சிக்குப்போனதும் உடனே யிங்குவந்ததும் நரைதிரை மூப்பி
ல்லாமற்போனதும் இவன் சொல்வதெல்லாமென்றாயிருக்கிறது
நீ இவ்விடனென்றுசொன்னாய் என் செல்வத்தை விரும்பி என்ச
கோதரனென்று சொல்லி அப்பாலயானும் நீதானென்றே சொ
ல்வாய்போற்றோன்றுகிறது, நீயென்னசெய்வாயோ இவ்வுலகத்தி

ற் பசியுள்ளவர் அதுதீரும்பொருட்டு இதுவோ சொல்வார் இதி

னுமெதுவேணுமோ அதைச்சொல்வாயாகவென்றே, நீயெவ்விதவே
மாற்றல் செய்தாலுஞ்சரி யானதுகப்படமாட்டேன். என்னுடை
யவ்மாற்றிலகப்பட்டவர் பலராவர் கொல்லர்வீதியிலூசி விலைகூ
றுகின்றாய் என்னிடத்திலொன்றும் பலியாதென்றான்.

இவ்வாறு பாதகனாகிய ஆதிசைவன் புகன்றதெல்லாங்கே
ட்டு பிரமோதன் அடிவயிற்றில் தீமூளவிம்மி வெதும்பி அந்தோ
உடுத்தவத்திரமும் பாம்பாய்க்கடிக்குமென்றறியாமற்கெட்டே
னென்று அகமிகவாட்டமுற்றவனாய் அருச்சகனை நோக்கி என
துகண்மணிக்கொப்பான நட்பனே! சற்று மறதியை நீக்கியோசி
த்தல்வேண்டும், முன்னாளில் நீயும்நானுமிக்கோயிலில்வைத்து ந
ட்புற்றோமன்றே, உடனே உனவீட்டுக்கு நீயென்னை அழைத்து
க்கொண்டுபோகவில்லையோ, உன்னுடையமனைவியையு மக்களை
யுங்கண்டு நானமகிழவில்லையோ, இந்நகரத்துள்ளார் யாவரும்
புகழ்ந்து போற்றும்வண்ணம் உயிரு முடம்பும்போல நட்புற்
றுவாழ்ந்தோமன்றே, அன்றியும் என்வரலாற்றைத்தையுஞ்சொல்
லி யுன்னிடத்திலென்னுயிரும் வாழ்வுமீதென்று ஓர் ஐநூறுகோ
லை அடைக்கலமாகக்கொடுத்தேனன்றே, உடனே உன்னிடத்தில்
விடைபெற்றுப் பொதிகைசென்று அகத்தியமுனிவரால் காசிக்
குப்போயங்கெழுந்து நரைதிரை மூப்பற்று யௌவன புருடனா
யிளங்கலுற்றனன், இதனாலுனக்குச் சமிசயம் வந்ததென்னின்
ரூபவித்தியாசத்தினால் என்பேரிற் சம்சயமிருக்குமானால் இடையு
டை பாவனைகளாலுண்மை தெளிந்துகொள்ளா திருத்தலென்
னே. இன்றிருந்து நாளையில்லாமற்போகும் செல்வச்செருக்காலெ
ன்னை நீ வெறுத்தல் நீதியாமோ, இனியாயினுமென் ஐநூறுகோலை
க்கொடுப்பாயாகவென்றனன். இவையெல்லாங் கேட்ட ஆதிசை
வன் நம்முடனன்று நட்புற்றவனும் அடைக்கலமாக ஐநூறுகோ
லத்தங்கமுமாகிய அப்பிரமோதனே இவனென மனத்துள் தெளி
ந்தானாயினும் நட்பனென்றொப்புக்கொண்டால் பொருளனைத்தை
யுங்கொடுக்கநேரிடுமென்றும், முன்னுரைத்த சொற்களெல்லாம்
வீணாகுமென்றுங், கருதி பிரமோதனைப்பார்த்துக் கோபித்துச்
சொல்லத் தொடங்கினான்.

ஓ அந்தணா! நீ ஆரணமறையோன் நானாகமவேதியன் உ
னக்குமெனக்கும் நட்புண்டாக யாதொரு காரணமுமில்லை. இ
னிமேலென்னிடத்திலேதாவது கேட்பாயானால் உயிர்மாயும்படி
வதைசெய்வேன் பிழைத்திருக்க எண்ணமுண்டானால் வெளியே

போவென்றலும,பிரமோதன் அடிவயிற்றிற் பகிரென்ற தீமூள
வெதுமபி மீண்டுமப்பாதகனை நோக்கிப பொயசொல்லிச்சாதி
ததலழகலல அடைககலபபொருள் கவர்ந்து சந்திர சூரியர் உள
ளமட்டும நரகத்திற்கிடந்துவருந்தாதே, எஙகும நிறைந்துவிள
ஙகும் கடவுளை மறைககவெவராலுமுடியாது அவரெல்லாமறிவா
ர், பொயசொல்லிவாழவார்குசெவவிடத்திலுமிலலை. மனசாட்
சிககு விரோதமாய நடககலாமா? அடைக்கலமாகப் பொருள
கொடுத்தநானெதிரில நிறகுமபொழுதே உன்னைககண்டவனயா
னென்று சொலலுகிறுய, இபபொழுதுஎன் அடிவயிற்றில் மூண
டெரிகின்ற தீககொழுந்தானது வீணாயபோகுமோ? சாமபரா
கசி விடாதோ? நிலையில்லாத செலவத்தைவழியில்லாதவழியி
லசமபாத்தியஞசெயதால் பழிபாவம அபகீர்த்தி இவைகளைவிளை
க்கும. நான் இவ்வளவு கெஞசிககேட்டு முன்மன மிரஙகவிலலை
யா, என்னுயிர்த்தோழனேயுன்னை வணஙகுகின்றேன் என்றுபல
வாறு கூறி அவவாதிசைவன் காலில்விழுந்துவணஙகி கிடந்த
னன் இவவாறு வணங்கிகிடககும பிரமோதனை அருசசகன்
கோபித்துககாலாலுதைத்தனன் பிரமோதனு மனமபொருமித
ழுந்து பொருள் கவர்ந்ததுமன்றி உதைக்கின்றனையாவென்றுஅதி
கோபத்துடன் அப்பாதகனமார்பிலுதைத்தனன. இருவருமகை
ககலகஞசெயயத்தொடஙகினா அவவேளையி லஙகிருந்தபலா இ
வாகளை விலக்கி உஙகளுக்கு வழக்கேதுமுள்ளதாயின இவ்வூர்
ஞாயசபைககணசெல்லுஙகள் இக்கோயிலிற கலகஞசெயவதுநீ
தியில்லையெனறனர், உடனே பிரமோதனும ஆதிசைவனையிழுத்து
க்கொணடு ஞாயசபையைசசார்ந்து தன வரலாற்றைதையுமு
ரைத்தனன. அவவுரைதனையுங்கேட்ட சபையோர ஆதிசைவ
னுரைத்தவைகளையுஙகேட்டு, அருசசகனைநோக்கி பரதேசியாய
உணணவும உடுக்கவுமில்லாமல் வருந்திய உனககு அளவறறதிர
வியம பெறுதறகுககாரணம யாதெனறுகேட்டனுய அருசசக
ன்என் நல்வினையின்வழிவந்ததென்றனன். சபையோர அநதந
ல்வினையும எவவாறுபொருள்கொடுத்ததுஎன, அருசசகன்வேறொ
ன்றுஞ் சொல்லவழியறறவனுய வாயமூடிமௌனமாயினன. உ
டனே சபையோா இவ்வாதிசைவனே பொருள் கவர்நதவனெ
ன்று நனகுயதெளிந்தவர்களாய அவவருசசகனை நோக்கி நீ
யே பொருள்கவர்ந்தாய்இவனே அப்பிரமோதனெனபான அடை
க்கலப்பொருளை உடனே நீ கொடுத்துவிடு எனறனா. இவவாறு

சபையோர் கூறியவைகளைக்கேட்ட ஆதிசைவன் அவர்களைநோக்கிக் களவும்புரட்டும்என்வம்சத்திலேகிடையாதென்றும் அடைக்கலப்பொருள் யான் கவரவில்லையென்றும், இவ்வாறு வேண்டுமானால் சுவாமி காசிபேச்சுரர் சன்னிதியிற் பிரமாணஞ்செய்து தருகிறேனென்றுங் கூறினான். அதுகேட்ட சபையோர் அருச்சகனைநோக்கி பிரமாணஞ்சொல்வது இலேசல்லவென்றும் கேவலமாயுள்ள பொருள் நிமித்தம் குலநாசஞ்செயதுகொள்வது தகாதென்றும பலமுறை கூறியுங்கேளாமல பிரமாணமேசொலவேனெனத்துணிந்து ஆதிசைவன சாதிப்பதாயினன. இதுகண்டபிரமோதன்சபையோரைநோக்கிப பிரமாணஞ்சொலலுதற்குரிய தினமியாதென, அவையோர் நாளையதினமாகியசோமவாரம் தக்கநாளெனச்சொல்லித் தங்கடங்கள வீடுகளிற்சென்றனர். அருச்சகனசொன்னபடி சாதித்தோமெனக் களிப்புற்றுப் பூசைமுறை நடத்தச்சுவாமி காசிபேசர் ஆலயத்துட்சென்றனன. பிரமோதன மாலைககட ள ட தநிப பசியாலும் பொருளிழநத துயரத்தாலுமிகவருந்தி ஓாமனையின் வெளிப்புறத்திண்ணையிறகிடந்தனன். மாலைகாலமும நிலவுமபோய மையிருளெங்கும்பரந்தது.

இஃது இவவாறாகப் பொய்ப்பிரமாணஞ்செய்யத் துணிந்த அருச்சகன் அருத்தசாமம்வரைப் பூசைநடத்தி யாவரும் தங்கள் தங்களிடங்களுக்குச் சென்றபின்பின்னர்தனியே அவ்வாலயத்திலோரிடத்திலிருந்து யோசிக்கலாயினன். அந்தோ நாமென்னகாரியஞ்செயதோம் சபையோர்முன் பிரமாணஞ்சொல்வதாய வீறுதோன்றபபேசினோமே இக்கடவுள்முன் பொயகூறினாலநம்மைபபொடிபாக்காமல் விடுவாரோ, இழிவான செலவத்தின் பொருட்டு அருமையான சிவனைபபோககுதல் மிகவும பரிதாபமே இனிமேலென்னசெயவோம இனிபபிரமாணஞசொல்லமாட்டோமென்று கூறுவதும் அழகில்லையே இவவாபத்தினின்றுதப்பவேறுவழியுங்காணோமே நமமனையாட்டியுரைத்த புத்திமதியினைத்தையுங்கேளாமறபோனோமேஎன்று, பலவாறுஎண்ணியெண்ணிவிதனமுற்றுக்கடைசியாய, இக்கடவுளிந்த மகாலிங்கத்திலில்லாமற்செயவதே உபாயமெனக்கருதி ஓர்கும்பத்தில் அக்கடவுளை ஆவாகித்து அடுத்த வடபுறத்தில் சாகோபசாகையாய் வளர்ந்துநிற்குமோர்புளியமரத்தினடியிற் புதைத்துக்கோயில்வாயில்களனைத்தையும் அடைத்துப்பூட்டி ஓண்டிக்கள்வன்போலதன்வீட்டிற்சென்றுசூரியோதயமாவதையெதிர்பார்த்திருந்தனன்.

ஆதிசைவன் செய்தி இவ்வாறாக அங்கோர் தெருத்திண்ணையிற் கிடந்துறங்கும் பிரமோதன் கனவில் சுவாமி காசிபேசர் ஓர் அந்தணன் வடிவாய்த்தோன்றி அனபாயபாதகனான அருச்சகன் சுவாமி காசிபேச்சுரரை ஓர் கடத்தில் ஆவாகித்து அடுத்து நிற்கும் புளியமரத்தடியிற் புதைத்திருக்கின்றான், ஆகையால் அம்மரத்தைத்தழுவி நின்று அருச்சகனைப் பிரமாணஞ் சொல்லச்சொல்லுவாயாக வென்றருளி மறைந்தனர். உடனே பிரமோதன் விழித்தெழுந்து தான்கண்டது கனவுதானெனினும் இங்கெழுந்தருளியது சுவாமி காசிபேசுரர்தானென்றுந் தெளிந்து பரிதாபமுற்று சுவாமி! மரகதாம்பிகையுடன் திருப்பள்ளி மெத்தையிற் கலந்து களித்திருக்குமின்பத்தை விட்டு அடியேன் மனத்திலெழுந்தருளினீர் நான் செய்த தென்னையோ யாரொருபாதகன் பிறக்கப் போவதாய இலிங்கத்திருவுருவினின்றும் நீங்கி ஓர் கடத்துள்ளும் வீற்றிருக்கும்படியாயிற்றே என்னைப்போல் அபராதஞ்செய்தவர்கள் இவ்வுலகத்திலெங்குமில்லை. கல்லும்முள்ளும் நிறைந்த காட்டுவழிபோன்ற அடியேன் மனத்திலெழுந்தருளிய தேவரீர் பொற்பாதங்கள்வாடிச்சிவந்தனவோ, என்று பற்பலபுலம்பி தொழுதுகொண்டிருக்கையில் ஆதிசைவன் அந்தரங்கத்தில் நிறைந்திருக்கும் பொய்ம்மயமான காரிருளுக்கு அஞ்சி உலகத்திற் பரவிய இருட்படலம் சூரியனுதிப்ப நீங்கிற்று. உடனே அருச்சகன் பிரமாணஞ் சொல்லப் பிரமோதனையழைத்தலும் அவன் சபையோருடன் சுவாமி காசிபேசர் ஆலயத்திற்சென்றனன் அதுகேட்ட அந்நகரத்தார் யாவரும் அவ்விடத்தில்வந்து கூட்டமிட்டனர். அருச்சகன் பொருளாசையில்மூழ்கிப்பிரமாணஞ்சொல்லக் கோயிலுட்சென்று இலிங்கத்தைத்தழுவினான். அதுகண்ட பிரமோதன் ஆதிசைவனைச்சமீபத்திலழைத்து நீ இந்த மகாலிங்கத்தைத்தழுவிப் பிரமாணஞ் சொல்லுவையேயானால் உனக்கன்றி இதுகண்டார்க்கும் கேடுவிளையுமாதலால் அடுத்து நிற்கின்ற இப்புளியமரத்தைத்தழுவிப் பிரமாணஞ்செய்வாயாகவென்றனன். அவையோரும் அப்படியே வற்புறுத்தினர். அருச்சகன் நாம் இரவிற்செய்த தீவினையனைத்துமிவர்கள் அறிந்தனர்போலுமென்று மனக்கலக்கமுற்று விதிவழி வருவது தவிராதெனத்தெளிந்து அவ்வாறே செய்கிறேனெனத் துணிந்து அப்புளியமரத்தைக்கட்டிக்கொண்டு திரிபுரமனைத்துஞ்சாம்பராய்ப்போகும்படி எரித்தருளிய சிவபிரான்மேல் ஆணை

யிட்டதாய், நான் அடுத்து நிற்கின்ற இவ்வேதியனை நட்புறவில்லை, இவன்யாதொன்று மென்னிடததிறதாவில்லை, முனனொருவிருத்தவேதியன்கொடுத்தது ஒன்றுமில்லாத ஒருசொள்ளை மூங்கிற்கோல் இவைபொய்யாயின் தெய்வ மென்னை எரிக்கக்கடவது என்றுரைத்தனன்.

இவ்வாறு ஆதிசைவன் பொய்ப்பிரமாணமொழிந்த உடனே முன் சிவபெருமான் புன்னகையி லெழுந்து திரிபுரத்தைப் பொடிசெய்த அக்காலாக்கினியே மரத்துடன் ஆதிசைவனையுஞ் சேர்த்தெரிக்கலாயது. அப்பாதகனெரிநது சாம்பராகியும அப்பெருந்தீ மேலுமேலும் விருத்தியடைந்து ஆகாயத்திற்கும் புவிக்குமோரளவாய்நின்றது. அதனால் உலகமெல்லாம் நடுநடுங்கின, அத்தீக்கொழுந்தினமேல் சிவபெருமான் பலமுகங்களுங்கரங்களுங்கொண்ட ஓர் பயங்கரமான வடிவுடன் தோனறி உலகமெல்லாம் சம்காரஞ்செய்வான்போல் அச்சமுறுத்த லாயினர், அதுகண்ட பிரமன் முதலானதேவர்கள் யாவரும் என்ன செய்வோமென்று வருந்தலாயினர். திருமால் கிடுகிடென்று நடுங்கி அச்சிவபிரான் சன்னிதியில் வெகுதூரத்திற்கப்பால் நின்று அஞ்சலி பந்தனம்செயது அகமுருகி சர்வசக்தியுள்ள பராபரக்கடவுளாகிய தேவரீரோ உலகங்களை யழிக்க நினைததாறறுப்பவர்யாவரென்று, பற்பல புகழ்ந்துபோற்றலும் சிவபிரானகோபம் நீங்கி இடபாரூடராய் மந்தகாசத்துடன் அப்புருடோத்தமமாயவனையருகிலழைத்து உனக்குவேண்டும் வரம் யாதென்றருளத்திருமால், சிவபிரானைவணங்கிக்கடவுளே உமமுடைய அடியவருள் யான் முதல்வனாகவேண்டும் உம்முடைய சன்னிதானத்தில் எக்காலத்தும் யான் தெரிசித்து வணங்கி நிற்கவேண்டும் தேவரும் யானும் போற்றிசெய்ததால் திருப்போற்றீச்சுரர் என்ற ஓர் அபிதானமும் தாங்கள் அணிந்துகொள்ளல் வேண்டும் என ஐயன் அவை யனைத்தையும் கொடுத்தருளிப் பிரமோதனையழைத்து அன்பா உன்னாலே பொய்புகன்ற பாதகனை எரித்தோம் உன்செல்வமெல்லாம் அவன்வீட்டில் புதைத்துவைத்திருக்கின்றனன் அவையனைத்தையுங்கைக்கொண்டு ஓர் கன்னியைவிவாகஞ்செய்து இந்நகரிலேயேசீவிப்பாயாக, அன்றியும் உன்னால் எரித்தாட்கொண்டவரென்று ஓர் பெயரும் யாம் பெற்றனம். வேண்டும்வரங்களும் கேட்பாயாக வென்றருளினர். உடனே பிரமோதன் ஆனந்த சாகரத்தில் மூழ்கினவனாகி அப்பிரா

னைவணங்கி சுவாமி என்பொருட்டு சாம்பராய்த்தேவரீ ரெரித்தருளிய ஆதிசைவன் உயிர்பெற்றெழல்வேண்டும் அடியேன்முடியில் உம்முடையபாதாரவிந்தத்தையடைய வேண்டும் என்றனன். இவையனைத்துங்கேட்டருளிய சிவபிரான் அவ்வாறருளியவ்விடத்திலேயே மேற்குமுகமாயோர் சிவலிங்கத்திருவுருக்கொண்டருளினர், அப்புருடோத்தமப்பெருமானுமப்பிரான்சன்னிதியிலேயே வணங்கிநிற்ப ராயினர்.

முனிவர்களே முன்னர் தீச்சுடர்மேல் விளங்கிய சிவபெருமானைப்புருடோத்தமப்பெருமான் புகழ்ந்துநின்றவிடம் அக்கோயிலினமேல்பாலாகும். தெரிசனஞ் செய்து நிற்குமிடம் அக்கோயிலிற சன்னிதியாகும். அப்பால்அந்தப் பிரமோதனைத் தேவர்களும் முனிவர்களும் பற்பல புகழ்ந்து வரங்களுநல்கித்தங்கடங்களிடங்களிறசென்றனர். பொடியாய்க்கிடந்த ஆதிசைவனும் பிரமோதன் கேட்டுக்கொண்ட வரத்தின்படி உயிர்பெற்றெழுநது மானமொருயால் மனத்தைவருததப்பிரமோதன் முனைவந்து, பொருளாசையால் நான் உன்னைமதியாமலிகழ்நத என் குற்ற மனைதவையும் பொருத்தருளல் வேண்டுமென்று அவன் பாதத்தில் வீழ்ந்து வணங்கித் தன்வீட்டுக்கழைத்துச்சென்றுவீடு விளைநிலம அணி புதைததுவைததிருந்த திரவியம் மற்றுமுள்ளபொருள்களனைத்தையும் நல்கினன். பிரமோதன் வீடு விளைநிலமுதலானவைகளை அவ்வருச்சகனுக்களித்துப் பொன் னிதிகளைமாத்திரங்கைகககொணடு அதிற்பாதி சிவபிரான் திருப்பணிக்களித்து மற்றத்திரவியத்தால் ஓர் பெண்மணியை மணந்து இல்லற வாழ்க்கையுற்று சுவாமி எரித்தாட்கொண்டவரைக் காலந்தோறும் தெரிசிப்பதே ஒப்பற்ற விரதமெனக்கருதி ஒழுகுவானாயினன்.

முனிவர்காள் இக்கதையை எழுதினவர்களும் பூசித்தவர்களும்படனஞ்செய்தவர்களும் படனஞ்செய்வித்தவர்களும் அன்புடன்கேட்டவர்களும் பிணி நீங்கு கவலை முதலானவைகளையணுகார் இப்பூமிக்கும் அவர்கள் அரசராகி வானவர்க்குமுமேலான தலைமை பூண்டவராய் இன்பமெல்லாம் அனுபவித்து முடிவிற் சிவகதியும் பெறுவார்கள் என்று சூதமுனி கூறி யருளினார்

## எரித்தாட்கொண்ட வசனச்சுருக்கம் முற்றிற்று

---

பதினேழாவது

## சிவசர்மா காசிபனை யடைந்தசருக்கம்.

பவமற நோற்றுநின்ற பண்ணவச் சூதன் றன்னைத்
தவமுயர் முனிவர் நோக்கிச் சாற்றிய வெரித்தாட் கொண்ட[ங்
சிவபிரான சரிதங்கேட்டோந் தெவிட்டாத வினைபததாழந்தோ
கவர்தரு வினையு நீத்தோங் கண்ணுதற் காட்பட்டோமால. (௧

இன்னுமொன் றுன்பாற் கேட்டற் கிசையந்தன மிமவானீன்ற
கன்னிதன் பாகத்தார்க்குக் காசிபமுனிவனபூசை
முனனரோ நடாத்துகின்று னென்றனை யன்றோ ரமுத்தி
நன்னிலை காறுமுள்ள கதையெலா நவில்தியென்றார். (௨)

உலகெலாஞ் சிவமாக்காண்பா ருரைத்தசொற் சூதன்கேளா
வலகிலாக் களிகொண் டெனற னையனமீர் கேணமினப்பாற
றலமெலாம் புகழுங்காசித் தடநகர் வசிப்போனுள்ளச்
சலமெலா மொழித்தோன் றன்பேர் சாறறுவர் சிவசர்மாவே. ()

சொல்லிய சிவசர்மாவுஞ் சூழ்தரு சீடரோடு
மல்லிய வுலகத்துள்ள மகிமைகூர் தீதம்வாசத்
தல்லியங் கொன்றை வேணி யனகனாலயங்க
ணலவியலாடிப் போற்ற நாணிலம் வலஞ்சூழ்காலை. (௪)

தொண்டைமா நாடுதாண்டிச் சோளமண்டலமுஞ்சூழ்ந்து
வண்டணி கூந்தற்செம்பொன் மாலையோர் மகளாங்கனனி
கொண்டதன் னாட்டினுள்ள கோயில்களேத்திப்பின்னர்
மண்டலமளக்குந தென்றன் மலையமாமலையிறசென்றே (௫]

கலயமா முனிவன்பாத கமலங்கள் சிரமேற் சூடிச்
சிலநின மாங்கண் வைகித் தெய்வதப்பொருனையாறறி
னிலகியதுறைகளாடி யிணர்செறி கனவினீழ
லுலகெலா மீன்றாள்பாகத் தொருவனை வணங்கியாங்கே. (௬)

பல்பக லிருநது பினனர்செல்லிமா வனத்தின் பாஙகர்
மல்கிய கருணையெங்கள் வரதர்க்கா கமத்திற்பூசை
யலகலி லாறறுவிற்போன காசிப வபிதானத்தோ
னெல்கலில் தவத்தி னிற்போ னுவருன்வாழ் கின்றனென்ன,

பற்பல ருளிப்பவாங்கு படர்தரச்சிவசர்மாவுங்
கற்பவருடனெழுந்து கனகமு முத்துஞ்சிந்திப்

பொற்பமா பொருநைமேய புண்ணியத்துறைநீராடி
யறபொடா மலகச்சூழ லருந்தவன சாலை புக்கான. (௮)

தவஞ்செயுங் காசிபனருள் தாழ்தலுமுனிவ னோக்கி
யுவந்தெழுந் தினிமைகூறி யுறறவா றுரைத்தியெனனச்
சிவந்திகழ் முனிவநினைந்த தேசிக னெனையாள் கொண்டேன
பவம்படா தருட்கண் சாறே பார்த்தெனைக் காத்தி யென்றான•

என்றலு முனிவன் கேட்டிங் செயதிவினை யாதலாலே
கனறிய பவங்களெல்லாங் கடந்தனை யிததலமபோல
மனறலேழ் நீக்கமேபோன் பறறொளி மூர்த்தியேபோற
றுனறிய திரைசூழ் வைப்பிற சொலலுதற கிலையாலென்றான் ()

காசிப னுரைத்தல் கேட்டுக் காதலகூர் சிவசர்மாவு
மாசிலா வவைகளெல்லா மடியனுக்கருடி யென்ன
வாசிசேர் தலைதிறகேறறு மகிமைகளுரைத்தே மாகப
பேசுந்தீர்த்தங்கள் காட்டிப பெருமையும் பேசுவானால (௧௧)

தீங்கிலு லரசரோரோ சிறறுயிரப் பறவையாகி
வீங்குவந் தாடகதேவி யெழுந்தருள் சுரந்து நாளும்
பாங்குற நிறகினறுனற பகர்தரு தேவிதீர்த்த
மாங்கதின் மூழ்கவெனனச் சிட்டரோ டாடினானால்! (௧௨)

மறறதோ ரரசனயாகம் வரந்தி யழிப்பவீங்கு
பெற்றிடப் புரிந்ததான பீடுசேர் சாலா தீர்த்தத்
துறறதோர் பெருமை யாவ ருரைப்பவர் மூழ்கவென்னச்
சுற்றிய சிட்டரோடு தோய்ந்தனன குணபாற் சென்றார் (௧௩)

இவணுள தொருவனறீய மேநதுலகை யுடனமூப் பினறி
யுவமையி லோருவாவா யுறறெழுந்திறு விந்த
வவனியோர் திபதீர்த்த மாமெனப் புகழ்வா ரெனனப்
பவமறக் கறபாரோடு படிந்தன னபபாற் சென்றார். (௧௪)

எனமனை யதிதி யென்பா ளிந்திரன் வாகைகூட
வன்மையார் தவங்கள் செய்து வரம்பல பெறறுள்யானு
நனமைகள் பெற்றே னென்பேர் நவிலுமிந் நீர்த்தமென்னத்
தோன்மைசேர் சிட்டரோடு தோய்ந்தனன் றென்பாலுற்றார். (௧௫

பழுதிலா துலகங்காத்தபடர்புழு மேனிவேந்தன்
முழுகலு மாற்றுயர்ந்த முழுபொலன் மேனியானான்

மழுவலான சடிலசீத்த மாம்புழு மாறி நீத்தக்
தொழுதிவன் றாழ்கவென்ன றாழ்கினன் குழலோடு (கக)

சித்திரன் குயிலாய் மேனாட் சென்றிதின் றாழ்கியெங்க
ளத்தனைப் பணிந்து தேவ ருயின ரங்கிதனபேர்
குத்திர வினைகணீக்குங் கோகில தீர்த்தமெனனப்
பத்தியா யெவருமாங்கு படிந்தனர் கூடபாற் சென்றார். (கஎ)

காலைகயோ டெழுனை மற்றைக் கலைமகளொ ளுழுந்நீக்க
மின்றுழக் குண்டமாக வெழுந்ததோ ரரசர்க்கென்ன
வங்கதின ஏழகியாரு மருள்புரு டோத்த மப்பேர்
செங்கண்மா றளியிற்சென்றார் காசிபன் மீணடுஞ் செப்பும். ()

சரதமே யென்னப் பொய்மை சாற்றிய பதகன்றியா
லெரிபடப் புரிந்தார்கோப மினிதுநீங்கிடக்கை கூப்பி
விரிதரப் புகழத மாயோன் மேயினை வணங்க வென்ன
வரியரி யென்று போற்றி யததனர் கோயில் புக்கார். (க௯)

செவ்விய சிவசாமரயான் செயதமா மகத்தின்மேய
கவ்வியங்கரத்துப பெம்மா னறுமலர்ப் பதங்கள் போறற
வெவ்விய வினைக டீர்ந்து வியனகதி பெறுவாரொன்னப்
பவ்வநோர் சிடரோடு பணிந்தனன் வடபாலுற்றார். (உ0)

முன்னரோர் பொய்சொன்னானை மூளெரி மடுப்பச்செய்த
தன்னிகரொரித்தாட்கொண்ட சங்கர மூர்த்திகாண்டி (ச்
பொன்னடிவணங்கில் வேண்டும் பொருளெலாமளிப்பரொன்னச்
சன்னிதி யெவரும் போற்றித் தாழ்ந்தனர் களிப்புறாரால்.(உக)

விளங்குமா லயத்திலுள்ள மீனாட்சி சுந்தரேசர்
வளங்கெழு மூர்த்தியெல்லாம வகைவகைமுனிவன் கூறி
யுளங்களிந் தினிதுபோற்றி யுருகிய சிவசர்மாவைத்
தளர்திகழ வச்சாலைக்குட் டகவுடனழைத்துச் சென்றான். ()

சென்றகா சிபனார் பாதஞ் சிவசர்மா வணங்கிப்போற்றி
நின்றுமா னிடராய் வந்தோர் நிரந்தரம் புரிதல் வேண்டு
கன்றுசேர் கருமமெல்லா கவில்கெனப் புலன்களெல்லாம்
வென்றவன் முறையா லெல்லாம் விரிதர விளம்பல்செய்தான்.

## சிவசர்மா காசிபனையடைந்தசருக்கம்முற்றிற்று.



## பதினேழாவது

### சிவசர்மா காசிபரையடைந்த சருக்க வசனச்சுருக்கம்.

பந்தபாசமறத் தவஞ்செய்து சிறந்த பண்ணவனாகிய சூதமுனிவருரைத்தருளிய எரித்தாட்கொண்டார் திவ்விய சரித்திரமனைத்தையுங்கேட்டு ஆனந்த சாகரத்தில் மூழ்கிய நைமிசவனத்து முனிவர்கள் யாவரும் மீண்டும் அச்சூதமுனிவரை நோக்கி முன்னரே சுவாமி காசிபேச்சுரரைக் காசிபமுனிவர் பூசைசெய்து வருகின்றனர் என்றீர், அம்முனிவர் முத்தியடைந்தது வரையுள்ள கதைகளனைத்தையும் உரைத்தருளவேண்டுமெனச் சூதமுனிவர் கூறுவாராயினர்.

முனிவர்களே சுவாமி காசிபேச்சுரரைக் காசிபமுனிவர்பூசைசெய்து வருகின்ற நாளில் புண்ணிய க்ஷேத்திரமாகிய காசிமா நகரில் வசிக்கின்றவனும் பற்றற்றவனுமாகிய சிவசர்மாவென்னுமோர் அந்தணன் அளவற்ற சீடர்களுடன் பூலோகத்திலுள்ள தீர்த்தங்களனைத்திலும் நீராடிச் சிவாலயந்தோறுந்தெரிசனைசெய்யக்கருதிப் பூவலஞ்சூழ்ந்து அநேக நாடு நகரங்கள் கடந்து கடைசியாயப் பாண்டி நாட்டில்வந்து பொதிகையிற் சென்று அகத்தியமுனிவரைக்கண்டு தெரிசனஞ் செய்து இந்திரகீலத் தலமாகிய பாவநாசமென்னுந்தலத்தில் வந்து ஸ்ரீ லோகாம்பிகை சமேதராய் விளங்காநின்ற சுவாமி பாபவிநாசேஸ்வரரை வணங்கித்துதித்து வசித்துவருகையில் நெல்லிவனத்திற்றவத்திற் சிறந்த காசிபரென்ற வோர் முனிவர் சிவபிரானுவப்பக் கைங்கரியஞ்செய்து வருகின்றனரென்று பல முனிவாகளாற கேள்வியுற்றுச் சீடருடன் அந்நதி யிருகரைகளிலுமுள்ள தீர்த்தங்களில் விதிப்படி நீராடி சிவாலயங்களனைத்தையும் போற்றி செய்து ஆமலக வனத்தில் வந்து காசிபமுனிவர் ஆச்சிரமத்திற்புகுந்து தவஞ்செய்துகொண்டிருக்கு மம்முனிவரை வணங்கி நின்றனன். காசிபர்நிஷ்டையினீங்கி வணங்கிநிற்கின்ற சிவசர்மாவையுபசரித்து வந்தகாரியமேதெனத், தங்களை ஆசிரியனாகக் கொள்ளவந்தேனென்று சிவசர்மா கூற இருவருங்களிப்புற்றவராய் வாழுகையில் காசிபர் அம்பைத்தல மகிமை முழுவதுஞ் சிவசர்மாவுக்குரைத்து, அவ்விடத்திலுள்ளஎழுவகைத்தீர்த்தங்களையுங் காண்பித்து மூழ்கச்செய்து சுவாமி காசிபேசர்* எரித்தாட்கொண்டவர் ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசர் புருடோத்தமப்பெருமா

ன் ஆகிய கடவுளரைத் தெரிசனைகளையுஞ் செயவிரதச் சரிததிரங்க ளானதனையு முரைத்துத் தான்வசிக்கும் பனனசாலைக்கு எழைத்துவரலுமசிவசாமா காசிபனை வணங்கி முனிபுங்கவரே! உலகத்தில மனிதராயப்பிறந்தோா நாடோறு மனுட்டித்துவரவேண்டு முறைமைகளனைததையும் அருளிச்செய்யவேண்டுமென்று பிரார்த்திக்கக் காசிபா அவைகளையெல்லாம் முறைப்படி கூறியருளினா.

சிவசாமா காசிபனையடைநத சருக்கவசனச்சுருக்க முற்றிற்று.

---

பதினெட்டாவது

## சிவசர்மா முத்திபெற்ற சருக்கம்

செயிர் விண்ட மாதவர்க்கோர் சிரோமணியாங காசிபனுஞ் சிவசர்மாவு, முயிரொன்று யுடலிரண்டா யாமலக வனத்திடத்தி லிவருந்து வாழுநாட, கயிலொன்று பொருனையுளதுறைகளெலா நீராடிக காசி செலவான், செயலொன்று சிவசாமா காசிபாதாண முடிசூடிச்செபபினுனல். (க

அனனவனறன மொழிகேட்டுக காசிபனுமம விடையளிப்பவடுத்தாரோடு, தனனிகருமபொருனையிலே நீராடிக் குயிலேசர் தாளகள்சூடி, வனனிவடி வாயொளிரு மெரித்தாட்டுகொளவள்ளறனை மரகதபெண், கன்னிதனைத் திருமாலைக் கண்ணாரப்பருகியொரு கருத்துட் கொண்டான. (உ)

போத்தபத முன்னீர்ப்பப் பெரிதுமனம் பினனீர்ப்பப்பின்பாற சீடர், சேர்த்திசொலி வரப்பொருனை யிருகரையி னீத்தமெலா சிறபபினுடி, யார்த்திபெற வாலயஙகள பலபோறறிக் கரிசாத்த வாதிமூல, மூர்த்தியிரு தாளவணஙகித் தலவாச மிருநதுதவ முறையிறசெயதே. (௩)

வானவர்கோன் மருதாகி நிழலளிபப வீற்றிருக்கும் வரதனாதந் தேளமரும் பதமலரோ செனனிமிசை யணிமலராய்ச் செயது மேலா, ஞானமுறச சிலதினமுற் றப்புறத்து நீத்தமெலா நானஞ்செயது. மீனமுறுஞ்சங்கமத்தி னீராடி வடதிசைக்கண மீண்டாருகி. (ச)

தெனமதுரை காளத்தி முதலான தலங்களெலாந் தெரிசித்தேத்தி, சுன்மமினை தவிழ்த்தாளுங் கங்கையிலே நீராடிக்

கைலைவாழ்வைப், பொன்மயமாம் வில்லிதனை விசவேச நாய கனைப் புகழ்ந்து போற்றி, நன்மையுறச் சிலதினமாக இருந்த தின்பின் பிரயாகை நண்ணியப்பால். (௫)

மேலான பிரமகபா லத்தலம்போ யுலகமெலாம் வெறுத் தானுகி, மாலான வர்க்கரிய வொருபரமன் சேவடியின் மன நகலப்பச், சாலான நிட்டையிலே பலகால மிருந்துசிவ பத வி சார்ந்தான், தோலாத நிட்டையிலே சிடுரெலா மாங்காங் கு துலங்கினுரால். (௬)

முடியாத வைராக்ய நிட்டையினுற் சிவசர்மா முத்திசெய் த, கடியாருஞ் சரிதமிதைக் கேட்டாருங் கைலைநிலை காண்பா ரொனலர், நெடிதான மறைகளெலா நனிதேர்ந்த சூதமுனி நிக ழ்த்தக்கேட்டு, வடியாத களிப்பினராய் முனிவரெலாம் வணக் கமொடு வருபபதானுர். (௭)

வேறு.

திருத்தமா முத்திசார்ந்த தெய்வதச் சிவசர்மாவின்
சரித்திரங் கேட்டு வந்தோர் தமிழ்முனி பொதியின்மேவி
யிருத்தன னென்று மெங்க ளெம்பிரான் மணத்தின்காட்சி
யருத்தியிற் கண்டுகொண்டா னருள்கவென் றிடலுஞ்சூதன் (௮)

வேதமா தவத்தீர் நன்று விளம்பினிர் முன்னோர் வேந்த
னுதிநாட் காசிபேசர்க் கணிதிரு விழாநடாத்தும்
போதினு மெட்டா நானிற் புங்கவன் குறுமுனிக்குச்
சோதிசேர் மணத்தின் காட்சி தந்தன னென்று சொற்றான். (௯)

சொற்றது கேட்டு மற்றைத் தூய்தவரெல்லா மீண்டு
கற்றவச் சூதசொன்ன நறுவிழா வதனின்மேனுட்
கற்றவர் புகழுமந்தக் கலையமா முனிவன் காட்சி
பெற்றது விரிக்கவென்னச் சூதமா முனிவன் பேசும். [௰]

## சிவசர்மா முத்திபெற்ற சருக்கம் முற்றிற்று.

---

பதினெட்டாவது

# சிவசர்மா முத்திபெற்ற சருக்கவசனச் சுருக்கம்

முனிவர்களே! அப்பாற் காசிபருஞ் சிவசர்மாவும் உயிரு

முடம்பும்போல அன்னியோன்னியமாய அந்த ஆமலக வனத்தி ல் வாழ்ந்துவருகையில் ஒருநாள் சிவசர்மா காசிமாநகரஞ்செல் ல நினைந்து காசிபமுனிவரை வணங்கி விடைபெற்றுப் பொரு ணைமா நதியிலிருகரையிலுமுள்ள தீர்த்தங்களின் மூழ்கிச் சிவா லயங்களோடுந் தெரிசனஞ்செய்து யானையைக்காத்தருளிய ஸ்ரீ ஆதிமூலப்பெருமாள் திருவடிகளை வணங்கிச் சிலதின மவ்விடத் தில்வசித்துத்திருப்புடைமருதூருக்குச்சென்று ஸ்ரீபுடார்ச்சுனே சுரரைத் தெரிசித்துத்தலவாசமாயச்சிலதினம்வாழ்ந்துசங்கமுக ம்வரைநீராடி மதுரை காளத்தி முதலான தலங்களிற்சேவித்து க்காசிமா நகர் சென்று சுவாமி விசுவேசபெருமானை வணங்கி ச்சிலதின மவ்விடத்திலும் வாசஞ்செய்து உலகப்பற்றுத் தொ லைங்கிய சித்தவிருத்தி யுடையனுயப பிரயாகையிற்சென்று சிவ பிரான் பாதாரவிந்தங்களைத் தியானித்துஆகார நித்திரையில்லா மல் வாங்காத வைராக்கியமுடன அளவற்ற காலம நிஷடையி லிருந்து கடைசியாய்ச் சிவகதி சார்ந்தனன். மற்றைச சீடாக ளும் சிவபெருமான் திருவடிகளைத் தியானித்துத் தவமபுரிவாரா யினா.

முனிவர்காள்! இச்சிவசர்மாவின சரிததகேடடவரும சி வகதிபெற்றுய்வார்கள் என்று சூதமுனியுரைத்தது கேட்டு மற றைய முனிவர்கள் யாவரும் ஆனந்த சாகரத்தில் மூழ்கினவராய அப்புராண முனிவனை வணங்கிச் சிவசர்மாவின் புண்ணிய சரித் திரங்களனைத்தையுங்கேட்டு மகிழ்ந்தோம் முன அகத்தியமுனி வர் பொதியாசலத்திற கெழுந்தருளினா என்றனை அம்முனிவனு க்குச்சிவபிரானதிருமணக்கோலககாட்சி யெவவிடத்தி லருளிச செய்தனரெனச் சூதமுனி சுவாமி காசிபேசா கொண்டருளும் எட்டாம் திருவிழாவிற காட்சி கொடுத்தனர் என்று கூறலும் முனிவர்கள் யாவரும் அப்பிரான அகத்தியமுனிவருக்கு மணக கோலங்காட்டிய புனித சரித்திரம சொல்லியருளவேண்டு மெ னச்சூதமுனி மேறகூறுவாராயினர்.

சிவசர்மாமுத்திபெற்றவசனச்சுருக்கம்
முற்றிற்று

## பத்தொன்பதாவது
## அகத்திய முனிவருக்குக்காட்சியளித்த சருக்கம்.

ஆகம முறைமையெல்லாங் காசிப னருள முன்னோ
யாகஞ்செய வசுமனபபே ரரசர்கோன் மரகதப்பெண்
பாகமா குயிலேசர்க்குப பங்குனித் திங்கடன்னில
மாகமா ரும்ப ரிமபா மகிழ்ந்திட விழாச்செயகாலே. (க)

எழுதினத் தடிமை கொண்டா ரிதையாம்ப ரத்துஞ்சொன்னங
கெழுமணி வெளியிடத்தங கிங்கிணிப் பதமொன பூனறி
வழுவற நடனஞ்செய்யும் வரதனாிரண்டு காலங
தழுவுமங் நகரஞ்சூழந்து தனியெழுந் தருளா நின்றார், (உ)

எட்டாநா ளெங்களைய விலங்குலைய் கோலங்கொண்டு
மட்டாருங குழலிபாக மருவிடப் பவனி கொள்வான்
கட்டாருந் தபனமாதி கனவபி டேகங் கொண்டு
பட்டாரு மலருமற்றைப் பணிகளு மணிசெய தப்பால. (௩)

அடியவ ரிரிதினலகு மமுதெலாங் களிப்பிற கொண்டு
முடிவிலா வாரதியங்கண முதுமறை முழககஞ்செயய
மடிவிலாத துபதீப வரிசைநற காட்சியெல்லாம
படிவமோ டெவருங்காணப் பராபரன கொலுவிலவைகி. (௪)

பவகாமீ யங்களென்ற பற்றறும் படிவர் வேண்டச்
சிவகாமி யமமையோர்பாற் றிகழ்தரத் திருநடஞ்செ
யுவமான மறற காட்சி யுலகெலாங் காணவெணணி
நவமான விமானமீதி னாயகன் வீற்றிருந்தே. (௫)

பூரண மாகமங்க ளணிபெற முழவம் வெள்ளை
வாரணம் வீணைவேதன வானவ ரிமபர் நாகா
நாரண னிசுாகள் கூறு நாமகிதங்க ளார்பபத்
தோரண வீதிதோறுஞ் சூழநதிடற கெழுநதான மாதோ. (௬)

இங்கிவை யாகமுனனு ளிமாசல மகளை வேட்குஞ்
சங்கரனேவலாலே தமிழவனை சார்ந்தயோகி
யங்குவந்தனக்கு யாமே யருண்மணக்காட்சி யினபம்
பொங்கிடத் தருதுமெனறா் போநதில ரினறுமென்றே. (எ)

ஆவியுந் துடிக்கநொந்தா னையனே யங்நாளிங்கு
போவெனப புகனறய நீகொள புதுமணககாடசி தனனைப

பாவிநான பார்க்கலாகா தென்றவோர் பான்மைதானோ
சாவதா முயிர்சுமந்து தரித்தன னின்னுந்தானே. (அ)

மைக்கட்டி யனையநெஞ்சைப் புலன்செலும் வழியிற் போக்கிப்
பொய்க்கட்டி யனையமாதர் பொலம்புவி நாடித் தீமே
னெய்க்கட்டி யனைய நாளு நெக்குரு கினனேனையா
கைக்கெட்டி வாயக்கெட்டாது கடந்தனன் மனத்தின் காட்சி.(

கண்ணுதா லுன்னைக்காணுக் கண்களும் வாழ்த்தா வாயும்
வண்ணநீள் புகழ்கேளாத செவிகளும் வணங்காக்கையு
முண்ணிகழ்ந அருகா நெஞ்சு முற்றவர் தம்மை நீரூழ்
மணணிலஞ் சுமத்த லந்தோ வம்பினும் வம்பே யன்றோ. (க0)

சந்திரப் பிறைவிளங்கு சடிலமுங் கருணைபூத்த
சுநதர வதன மைநதுந தோகையோர் புறமும்பாச
பநதனை யறுத்தாட் கொள்ளும் பதங்களு நோககி நோக்கிச்
சிநதனை களிக்கப்பெற்றா சென்மமே சென்மமன்றோ. (கக)

கோடானு கோடியான பிறப்பெலாங் குறிப்பொனறுகி
வாடாத தவங்களுளும் வளர்பபவ ரப்பாலீணடு
பீடாரும் புனிதராகப் பிறந்தவ ரவரோ கண்ணுற
றோடாரு மொருவன றன்னை நோக்கினா சுகித்து வாழ்வார்.

ஆதலா லிஃதொன்றில்லேற் காவதொன்றில்லை யென்ன
வேதமா முனிவனுள்ளம் வெதும்பின னினிமேலீண்டு
நாதனார் மணக்கோலத்தை நாடிடா திருக்கேனென்ன
மூதெரி மூட்டிகாப்பண் டூவாத தவததி னின்றான். (கங)

வேறு.

மலமறு தமிழ்முனி மாதவ மின்னச்
சிலதினம் புரிதலுந் தெரிநது கொன்றையார்
விலமலி சடையினன் விரைந்து சென்றனன்
சலமறு முனிவரன் மனத்திற் சார்ந்தனன். (கச)

அனபகே னின்றவத் தகமகிழ்ந்தனை
முன்புனக் களித்தது முடிப்பவந்தனம்
( பான்பயி லம்பையிற பூமிகாவல
னினைபொடு திருவிழா வியற்று கின்றனன். (ரு)

ஆங்கது காணிய வமரர் மாதவர்
பூஙகமலத்தவன் புணரிமேனிய

ரோங்கிய திரிபுவ னத்து முற்றுளோர
தாங்கிய களிப்புட னங்குச சாரத்தனர்.       (௧௬)

ரிய காதலின மகிழ்ந்து யாங்கொளத்
திருவிழா பறபலர் செய்ய நின்றனர
பெருவிழா விதற்கிணை பேசற கிலலைபாற
கருவிழி படைத்தவர காணுங் காட்சியே,       (௧௭)

எண்டினத் திருவிழா வின்று யாமுமை
யணைடையிற களித்திட வாவணந்தொறுங
கண்டவர் வினைகெடக் காட்சி நல்குதாங்
தொண்டர்சீ துணையுடன சூழ்சசென றிடின.       (௧௮)

நீடுநம் மணத்தொடு நித்தககாட்சியும்
பீடுறக் கண்டுநற பேறு மெய்துவை
வாடலென செலலென வருதலொர நீளசிலை
யாடகப பொறையின னகங்கரந்தனன       (௧௯)

காந்தளும விழிகதனன கடிய மாதவத்
திரத்தின் னீங்கினன சிவபிரானசெய
வரத்தினி லூன்றின னுணர்வின மாமுனி
சிரத்தினிற கரத்தினை முகிழ்த்துச் சோதினன.       ()

பற்பல புகழ்ந்தனன் பணிந்து போற்றினன
தற்பர வெனக்குநின காட்சி தந்திட
வறபொடங் கழைத்தனை யகிலத் தென்றுனை
பொற்புள ரிலரெனப் புகன்று துளவிருன்.       (௨௧)

சீடரு மற்றுள சுவத்தின செல்வரு
மேடணி குழலியு மெவரும பின்செலக்
கூடமுங் குன்றமுங் கடந்து கோலமாய
பீடுயர் சிங்கையிற பெயர்ந்து சென்றனன.       (௨௨)

வாத்தியத் தொனிகளும் வணங்குந்தேவர்சொற
றோத்திரத் தொனிகளுஞ் சோத்திரம்புகக்
காத்திர முழுவதும புளகக்கஞ்சுகம்
போர்த்தனன் குழாத்தொடு விரைந்து பேரியினன்.)

தன்னை முன்செலச் சடலம் பினசெல
வன்னதி னிழலென வடுத்துச் சீடரும்

ங்கக் கண்டார், னன்றருளு நயனமுடன் மறைநவிலுந் திருவா
யி னலமுங் கண்டான், வென்றிமழு முழவினமு மபினயமு ம
ருவுகரம் விளங்கக்கண்டான், மன்றலங்கூ விளமென்போ ட
ரவுசிர முதலணி கொள் மார்பங்கண்டான். (௩௧)

உழுவைதரு முடைகண்டா னுரகவரை ஞாணதின்மே லொ
ளிரக்கண்டான், வழுவின்மறை யொருநான்கு மறியாத பதம
லர்கண் மகிழ்ந்து கண்டான், விழுதுவிடு திருநீற்றின் முழுகக
ணிந்து விளங்குதிருமேனி கண்டான், றெழுது தொழு துறங்கி
னற வானந்தப் பெருங்கடற்கோர் துறைகாணுதான். (௩௨)

பூவாரு நான்முகனு நாரணனு மறியாத புனிதவென்றுங்,
தேவாரு மொருகோடி மறைப்புலவர் தேடிவைத்த திருவேயெ
ன்றுங், காவாரும் பொதிகையிலவர் தழைத்தெனையாட்கொ
ண்ட கரும்பே யென்று, நாவாரப்பலதுதித்துப் பரவசமுற்ற
டிக்கமல நயந்து நின்றான். (௩௩)

நின்றான்மே லருட்கடைக்கண் சிறிதளித்தங் கருகழைத்து
நித்தநாதன், பொன்றுத தமிழ்முனிவ வுனக்குரைத்த படிநம
து புதுமணத்தி, னன்றான காட்சியொடு நடனமிடு காட்சியே
லா நல்கலசெய்தோ, மின்றினீ வேண்டுவர மளித்தருள்வோ
ங் கேட்டியென விசைத்தானந்தை, (௩௪)

ஐயனருண் மொழிகேட்ட முனிமகிழ்ந்து மீட்டுமவ னலா
த்தாள்போற்றிச், செய்யவனே நினவருளாற பெற்றனவொ
ன்றிலையெனினுஞ் செப்புகின்றேன், வையமெலாம் புகழ்ந்த வ
மபையிலே யாண்டுதொறும வருமிந்நாளி. லையவுன தருட்
காட்சி தந்தருளவேண்டுமென்று னுணாவின மிககான. (௩௫)

மகத்துவஞ்சே குறண்முனிவ னுரைத்ததுகேட் டகிலேச
ன் மகிழ்ந்து நோக்கி, யகத்தியநீ கேட்டவர மஃதளித்தோம்
வேறுசில வருள்வோங் கேட்டி, சகத்திலுள்ளோ ரென்காட்சி
நீபெறுங்கா லன்காட்சி தனைக்கண்டாலும், மிகத்திறஞ்சேர் ப
த்திலுறு நலமனைத்து மினிதெய்த வரிசைத்தா மன்றே. (௩௬)

திருமணத்தின் காட்சியொடு திருநடனக் காட்சியிங்கு சி
றப்பதிறகுக், கருணையொடுதந்தளித்தோ மனபாநீ யினிப்பொ
திகைக் கானஞ்சென்றே, யருமணஞ்சேர் தமிழ்மொழியை வள

ரத்தினிது வாழதியென வருளச்சிந்தை, யுருகிமுனிவரன்பிரித
றகொளாறு மனவருத்த முறாரேனும். (௬௭)

பரமனருட் பணிபெரிதென் றுளங்கொண்டான் பதமலரி
ற் பணிந்து கொண்டா, னிருவிழியு மொருமனமு மப்பெருமா
ன திருவடிக்கே யெய்த வைத்தான, சுரர்முதலோர புகழந்
தமலா சொரிந்திடதென் மலையமலைச் சூழ ஞெக்கிந், திரு
முனிவர் தனைச்சூழக குறுமுனிவன மேலாறு செல்லுங்காலை.()

கடைநகரி லிருப்பவரைப் பசித்தவன்போ லமுதுதவக் க
டைக்கணிப்ப, வடையிலமு தெடுத்தவர்கள் வரததாழ்ததல் க
ண்டனகனப்பாற் சென்று, ஞடைநதவர்க டவஞ்செயலுக் கி
ரங்கியவ னூற்றவர்க ளுதவுமன்னத். திடைதனது பதநகாட்
டி வரமளிததப் பொதிகையிற்சென் றினிதுவாழந்தான. )௬௯)

வேறு.

கொண்டமா தவத்திரப்பாற் குறுமுனி பொதிகை சார்ந்தா
னண்டர்கோன வீதிருழநதங் காலயஞ் சென்று னிநத
மண்டலந தனனிலிநநாள் வருந்தொறுஞ் சபேசா காட்சி
கண்டுதன னுழியிற் செலவான கலையமாமுனிவன் மாதோ. (௭0)

கண்ணுதற் பெருமான் காட்சி கலைய'மா முனிகாண் போழதி
லண்ணினின் றேத்தி வந்த வடியவர்க் கமுத நல்கி
யுண்ணிகழ்ந்துருகினரோ ருலகெலாம் புகழ வினப
நண்ணிநின் றப்பாலெங்க ளுயகன பதவி சார்வார். (௭௧)

மக்களும் பொருளுமின்ப மல்கிய வாழவுஞான
மிக்கநல லறிவும்வீடு மேவுவர் குறுமுனிக்கு
நக்கனா காட்சி நல்கு நன்மைசோ சரிதமிஃதைத்
தக்கவர் முகமாய்க் கேட்டோர சநததமுலகின மன்னோ. (௭௨)

அகத்திய முனிவருக்குக் காட்சியளித்த சருக்கம்
முற்றிற்று.

---

## பத்தொன்பதாவது
## அகத்திய முனிவருக்கு காட்சியளித்த சருக்க
## வசனச்சுருக்கம்

முனிவர்களே! திருவிழாமுறையினைத்தையும் கா
சிபமுனிவர் முகமாயக் கேட்டறிந்த மசுமனச் சக்கரவர்த்தியா

னவன் ஆகமமுறைப்படி ஸ்ரீ மரகதாம்பிகை சமேதராகிய ஸ்ரீ காசிபேச்சுரருக்குப் பங்குனிமாதத்தில திருவிழாநடத்தநிச்சை யித்துத் துவசாரோகண முதலவரிசையாக நடத்தி வருகையில் ஏழாந்திருவிழாவன்று சுவாமி நடராஜபெருமான் இரண்டுகா லமெழுந்தருளி மூன்றாங்காலமாகிய எட்டாம்நாள் பச்சைசாத் திகோலங்கொண்டு சகலவாத்தியங்களுமுழங்க வெள்ளிவிமா னத்தில் ஆரோகணஞ்செய்து அடியார்களியாவருக்குங் காட்சி கொடுத்தருளத் திருவீதிவலமா யெழுந்தருளா நின்றனர்.

இங்கு இவ்வாறாக முன் இமாலயன் குமாரத்தியைச் சிவ பெருமான பாணிக்கிரகணஞ்செய்கையில அப்பிரான உத்திரவி னபடி பொதிகாசலத்தி லெழுந்தருளிய அகத்திய மகாமுனிவா சாமிவிடத்தில் வந்து வெகுகாலமாகியும் சிவபெருமானுத்தர வளித்தபடி திருமணக்காட்சி நமக்கு இன்னுமளித்திலர், என று மனவருத்தமுற்று அந்தோ கடவுளே! என்னைத்தெற்கே செ ல்லென்றருளின்தின காரணம் உமது திருமணக் கோலத்தைப் பாவியாகிய நான காணக்கூடாதென்றுதானோ, புலன்கள்போ ம் வழியில் மனதைச் செலுத்திப் பெண் பொன புவி என்ற இ வைகளையே நசி உளமுருகப்பெற்றகாரணந்தானோ, சுவாமி! உ ம்முடைய திருமணக்காக்ஷி அடியேனுக்குக்கைக்கெட்டி வாயக் கெட்டாமறபோனது. கண்ணுதற் பெருமானாகியகடவுளே! உம் மைக்கண்டு களிப்படையாத கண்களும் வாழ்த்தாத வாயும் உம் முடைய திவ்விய சரித்திரங்கள் கேளாதசெவிகளையும் சிட்டை யில் நினைந்துருகாத மனத்தினையும் உடைய மனிதர்களை இவ்வு லகம் சுமப்பது வம்பே யன்றோ. கடவுளே! நமது சந்திரப்பி றை விளங்குகின்ற சடாமகுடத்தையும் கருணைபூத்த தழகுபொ ருந்திய ஐந்து முகாரவிந்தங்களையும உமாதேவி வீற்றிருந்தருளு கின்ற ஓர் பாகத்தையும் பந்தபாச மறுத்தருளும ஸ்ரீ பாதாரவி ந்தங்களையும் பார்த்துப்பார்த்துச் சிந்தை களிக்கப் பெற்றவா எடுத்த ஜன்மமே ஜனமமன்றோ, கோடானுகோடியான பிறவி கள்தோறுமவிடாது செய்துவந்த தபோபலமுடையவரோ அச் சிவபிரானைக் கண்ணாரக்கண்டு களிப்பவர். ஆதலால் எவவகைப் பலனுமில்லாத நாயேனுக்கப்பிரான் தெரிசனமெவவாறு கிடை ப்பதாகு மென்று பறபலபுகன்று நெஞ்சழிந்து இனிமேல் அப் பிரான்திருமணக்கோலத்தைக்கண்டு களிப்படையாமல் உயிர்த ரிதது வாழுகிலேனெனத்துணிந்து பஞ்சாக்ஷரி மந்திரியினின்று அருமையான தவஞ்செயயத்தொடங்கினன.

## ௨௧௮ அகத்தியருக்குக் காட்சியளித்தசருக்க வசனச்சுருக்கம்.

இவ்வாறு அகத்தியமகாமுனிவர் தவஞ்செய்தலை யறிந்த கருணாநிதியாகிய சிவபெருமான் அம்முனிவனை நிஷ்டையிற்புகுந்து ஓ முனிவரனே! உனனுடைய தவத்திற்கு வந்தோம் நாமுரைத்தபடி திருமணக்காட்சி யருள நினைந்தோம் ஓர் அரசன் நமக்கோர் திருவிழா அம்பைமா நகரத்தில் நடத்திவருகின்றனன் இன்று எட்டாந்திருவிழா இதுபோல் நமக்குத்தேவர்களும் திருவிழா நடத்தியிருபபதில்லை அவ்விடத்தில் விண்டு பிரமன் முதலான தேவர்களும் முனிவர்களும் வந்து நிறைந்திருக்கின்றனர் ஆகையால் நீ உன்னைச்சேர்ந்தவருடன அவ்வம்பைமாநகரத்திற்கிப்பொழுதே செல்வாயாயின் நம்முடையதிருமணக்கோலமுந்திருநடனக் கோலமுங் கண்டு தெரிசிக்கலாகும சீக்கிரம் செல்லக்கடவை யென வுரைத்தருளி மறைந்தனர். உடனேமுனிவனிஷ்டையினின்றும் நீங்கிச் சிவபெருமான் கருணையை வியந்து கைகுவித்து வணங்கிப்புகழ்ந்து சீடர்களும் உலோப முத்திரையும் மறறைய முனிவர்களும் புடைசூழ மலையாசலத்தினின்றும் புறப்பட்டுச்சிங்கைமாநகர்கடந்துவருகையில்வாத்தியகோஷங்களும் தேவர்கள் கூறுந்தோத்திரமொழிகளுஞ் செவியிடத்திற் புகுதலுங் களித்து ஆனந்தக்கண்ணீர் சொரியப் புளகப்போர்வைபோர்த்தவனாய்ப் பள்ளத்திற்பாயும் வெள்ளம்போற் சூழ்ந்துவருவாருடன அம்பைமா நகரத்திற்சென்று கடை யிடையென்ற நகரங்களையுந்தாண்டி முதல் நகரத்திற்புகுந்து பற்பல அலங்காரத்துடன் விளங்குகின்ற தெற்கு வீதியிற் பிரமன் விஷணுதேவர் முனிவர் முதலானோர் தொழுது வணஙக இமாசலத்தினுண்டாகிய உமாதேவியாரொனற காமவலலி படரப பெறற பரமசிவமாகிய கற்பகதரு ஓர் வெள்ளிய விமானத்தின்மே லெழுந்தருளி வருதலைக்கண்கள் குளிரக்கண்டு துதிகொண்டு விரைந்தெதிர்சென்று சிரமேற் கரங்குவித்து ஆநந்தக்கண்ணீர்பெருக்கி நல்விதியை வியந்து மும்முறை வலங்கொண்டு வணங்கித்தரித்திரனுக்கு நிதிகிடைத்ததுபோலவும் பூர்ண சநதிரனைக்கண்ட சமுத்திரம்போலவும் களிப்புற்றனன். அன்றியும் முனிவன் அவ்விமானத்துள்ளே இமாசலத்தையும் அவ்விடத்திலமைக்கப்பட்ட திருமணப்பந்தரையும் அதற்குணிறைந்த அளவற்ற உயிர்த்தொகைகளையும் எம்பெருமான் பிராட்டியை மணஞ்செய்து கொலுவிருந்தருள்கின்ற காட்சியையுங்கண்ணாரக்கண்டு ஆனந்தசாகரத்தின் மூழ்கினன். நினைவார் நினைவின்படி நின்றருளும

ப்பெருமான் தனது திருநடனக்காட்சி கொடுத்தருள முனிவன் சூழ்வந்தவருடன் அந்நடராஜபெருமான திருவுருவனைத்தையும் நோக்கிப் பற்பல புகழ்ந்து வணங்கினன. உடனே சிவபெருமான அவ்வகத்தியமுனிவனை யருகிலழைத்து மந்தகாசத்துடன எனக்கன்பனான தபோதனனே! நாமுனக்கு முன்னுரைத்தபடி திருமணக்கோலக்காட்சி தந்ததுமன்றித்திருநடனக் காட்சியுங் கொடுத்தோம் இனிமேலுனக்குவேண்டும் வரங்களைக்கேளென றருளினார். உடனே அம்முனிவனமீண்டுமக்கடவுளை வணங்கிச்சுவாமி யடியேனெல்லாவரங்களுந் தங்களால முன்னமே பெற்றிருக்கின்றேனாயினும் இப்பொழுது வேண்டும் வரமொன்றுளது அது யாதெனின வருடந்தோறுங்கொண்டருளு மித்திருவிழாவிலித்தினத்தில அடியேனுக்குக் காட்சி தந்தருள்தலே, எனக்கடவுள் அவ்வரமளித்ததுடன் உனனை இந்நாளில தெரிசித்தவர்கள் நம்மைத்தெரிசித்த பலனடையக்கடவாரகளென மற்றொரு வரமுங்கொடுத்துப் பொதிகை செல்லவிடைகொடுத்தனுமமுனிவன கண்களு மனமு மப்பிரானபாற் கிடப்ப மனைவி சீடா முனிவர் இவர்களுடன அந்நகரத்தின் மேல்பாற் கடை நகரிற்செலலுகையில் அங்குள்ள சிலரை நோக்கிப் பசித்தவர்போலமுது கொண்டுவரச்சொல்ல அவர்களது கொண்டுவராக்கால தாமதஞ் செய்தபடியால அகத்தியர் அப்பாற்சென்றனர் பிறகு அமுது கொணர்ந்தவர் அம்முனிவனை காணப்பெறாமையால் வருந்தித்துவஞ்செய்ய அகத்தியர் மீண்டு அவ்விடத்திற் கெழுந்தருளி அவர்களளித்த அன்னத்தின்மேற்றனது திருவடிகாட்டி அவர்களுக்கு வேண்டும் வரங்களுங்கொடுத்து பொதிகையிற சென்று தமிழ வளர்ப்பாராயினர்.

நைமிசவனத்து முனிவர்களே அகத்தியர் பொதிகைசார்ந்தனர் வீதிகொண்டருளிய நடராஜப் பெருமானும் ஆலயத்திலெழுந்தருளினர் அன்றுமுதல் வருடந்தோறும் இவ்வம்பைமாநகரத்தில் சுவாமிகாசிபேசருக்கு நடந்துவரும் திருவிழாவில எட்டாம்நாள் அகத்தியமுனிவர் ஆங்கெழுந்தருளிச் சேவித்துப பொதிகாசலத்திற்செல்லுகின்றனர். கண்ணுதற்பெருமானைகாட்சி அகத்தியமுனிவர் காணுங்காலத்திற் குழுமங்கண்டு சேவித்துச சிவனடியார் யாவர்க்கு மமுதருந்தி மனமுருகப்பெற்றவர் இம்மைமறுமைப்பலன்களை யடைவார்கள் இச்சரித்தைப் பெரியோர்முகமாய்க்கேட்டவர்கள் புத்திரசம்பத்தும் செல்வமுமி

ன்பமும் நீடூழி வாழ்வும் ஞானமும் கடைசியில் மோக்கமும்பெ
றுவார்கள் என்று சூதமுனிவர் கூறியருளினர்.

அகத்தியமுனிவருக்குக் காட்சியளித்த சருக்க வசனச்சுருக்கம்
முற்றிற்று.

## இருபதாவது
## காசிபர் கபிலமுனிவராயவதரித்த சருக்கம்.

தண்ணருந் தமிழ்முனிவன் றற்பரனார் மணக்கோலங்
கண்ணாரக் கண்டகதை கேட்டுள்ளங் களித்தனமென்
றுண்ணிறைந்த முனிவரெலா மொருசூத முனிவரனைப்
பண்ணாரப் பறபலவாயப் புகழ்ந்தினன பணிபபரால். (க)

வாசமெலாங் கமழுகின்ற வாமலக வனத்திடத்திற்
பாசமெலா மறநீத்த பண்ணவர்க்கும் பண்ணவனாங்
காசிபமா முனிவரன்றன் சரிதமெலாங் கருணையொடு
பேசிடுக வென்றிடலுஞ் சூதமுனி பேசுவனால். (உ)

இவ்வாறு குயிலேசர் முருகணியி னெழிற்றோக்கித்
தெளவ்வாத வானந்த சாகரத்தி னடுமூழ்கி
யெவ்வாயுஞ் சிவமயமா யிதையங்கொண் டியாவருக்கு
மொவ்வாத யோகத்திற் காசிபனும் குறைதிடுநாள். (௩)

வேதண்ட மலைவிளங்கும்விதக்கனார் சன்னிதியிற்
பாதங்கண் முடிசூடி யாழேந்திப்பகாவேத
கீதங்கள் பலபாடிக் கிளாகின்ற நாரதனார்
சீதங்கொண் முகநோக்கிக் கருணையுடன் செப்புவரால். (௪)

இசைமுனிவ பூதலத்தி லெழிற்பாண்டி நன்னாட்டிற
திசையனைத்தும் புகழ்நெல்லித் திருவனஞ்சேர் ரம்பைதனி
னசையனைத்தும் வகித்தென்னை நாடோறு நயந்துமுடி
மிசையிடத்து மனத்திடத்து மிகவேண்டி னிற்பாயை. (௫)

மாதவத்தோர் தலைவனுமாய வானவரும் புகழ்நேத்த
நீதவுத்த மத்தலையே நிற்பாயை விளங்குகின்ற
நீதவித்த சிந்தை நந்தனு செலவனெனுங்காசிபனை
யாதரத்தி னிவ்வுழிநீ யழைத்தினிது வருகெனறுர் (௬)

